# கல்கி

KALKI
13.12.87
ரூ. 2.

## கூவம்:

பழைய குற்றங்களும்
புதிய திட்டங்களும்!



# இலவசம்

இப்போது பிஜ் உபயோகப்படுத்துவீர்
மிச்சப்படுத்துவீர்... அதிகமோ அதிகம்!




ஒரு இலவச லவண்டர் டியூ
லக்ஷரி சோப் (குறிப்பிடப்பட்ட
விலை ரூ. 6.40)—2.5 கிலோ
பேக் ஸூப்பர் பிஜ்
வாங்குந்தோறும்.

பிஜ் உபயோகிப்பீர்! உங்கள் சமையலறை
பாத்திரங்கள், கண்ணாடிப் பாத்திரங்கள்
தரை மற்றும் வாஷ் பேஸின், பளபளப்புடன்
ஜொலிக்கும்.

இப்போது நீங்கள் புத்துணர்ச்சி பெற
முடியும்—லவண்டர் டியூ கொண்டு.
காரணம் அது இலவசம்—பிஜ் வாங்கும்
பெண்டிருக்கு!

SUPER
BIZ
5-refill pack
multipurpose
CLEANING
POWDER

GODREJ SOAPS PVT. LIMITED
BOMBAY-400 079
MADE IN INDIA
NET WT. 2.5 kg.
A Godrej® PRODUCT
LOCAL TAXES EXTRA PACKED
MAX. PRICE Rs

CLARION/B/GS/59/244 TML

* நாவலக் சேரி ரேஷன் கடையில் நீண்ட கியூ.

# யாழ்ப்பாணத்தில் நமது நிருபர்

**இந்திய அரசு, சென்ற வாரம் இலங்கைக்கு அழைத்துச் சென்ற பத்திரிகையாளர் குழுவில் நமது நிருபரும் இடம் பெற்றிருந்தார். யாழ்ப்பாணம் சென்று வந்த அவர் எழுதுகிறார்......**

வெகு வேகமாய் யாழ்ப்பாணம் சகஜ நிலைமைக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறது. பொது மக்கள், காலை ஏழு மணியிலிருந்து மாலை ஐந்து வரை ஊரடங்குச் சட்டம் தளர்த்தப்படும்போது சாலைகளில் நடமாடுகிறார்கள்; சைக்கிளில் போய் வருகிறார்கள். சின்னப் பையன்கள் விளையாடுகிறார்கள்; தெருவில் இந்திய ராணுவ டிரக் போனால் கையசைக்கிறார்கள். ஒவ்வொரு வீட்டிலும் கொம்பு ஒன்றில் வெள்ளைத் துணி கட்டி, தாம் அமைதியை விரும்புவதை வெளிப்படுத்துகிறார்கள். கூடவே ஆங்காங்கே இந்திய ஜவான்கள் துப்பாக்கியுடன் நிற்கிறார்கள். 'பாஸ்' என்று எழுதி ஒட்டின தனியார் மினி பஸ்கள், நிறையப் பயணிகளுடன் ஓடுகின்றன. அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்து யாழ்ப்பாணத்துக்கு வந்து தேவையானவற்றை மக்கள் வாங்கிக் கொண்டு போகிறார்கள். அப்படி வந்தவர்களுள் ஒருவரான ஜெயசிங்கத்துடன் ஒரு மினி பேட்டி:

"உங்களுக்கு என்ன தொழில்?"

"பயிர்த் தொழில்!"

"நீங்கள் யாழ்ப்பாணத்துக்காரரா?"

"எனக்கு மண்டைத் தீவு!"

"இப்போது யாழ்ப்பாணம் எப்படி இருக்கிறது?"

"முதலில் ஒன்பது பத்து ரூபாய்க்கு விற்றது அரிசி. அப்புறம் இருபத்திரண்டு ரூபாய்க்கு விற்றது; இப்போது பதினொரு ரூபாய். ஒரேயடியாய் ஏறிய விலைவாசி குறைந்து வருகிறது."

யாழ்ப்பாண நகர நிர்வாகத்தில் முக்கிய பொறுப்பு வகிக்கும் இந்திய ராணுவ அதிகாரியான ஆர். ஐ. எஸ். காலான், "இப்போது விடுதலைப் புலிகளிடமிருந்து ஆயுதங்களைப் பறிக்கும் பணியுடன் கூட நிவாரணப் பணிகளையும் முழு வேகத்தில் செய்து வருகிறோம். பாழடைந்த கட்டடங்கள், ஆஸ்பத்திரி பகுதிகள் ஆகியவற்றைப் புனரமைக்கும் பணியில் ஈடுபட்டுள்ளோம். ரேஷன் கடைகளில் ஊரடங்கு இல்லாத நேரங்களில் உணவுப் பொருள் விநியோகம் நடக்கிறது. ஆஸ்பத்திரியில், அமைதிப் படையின் பணியின் போது பாதிக்கப்பட்டவர்களுக்குத் தீவிர சிகிச்சை நடைபெற்று வருகிறது" என்றார்.

யாழ் நகர ஆஸ்பத்திரியின் ஒரு வார்

* சற்குண நாதன்



* ஜெயசிங்கம் (விவசாயி)





* நல்லூர் கந்தசாமி கோவில்.

டில், நாம் சந்தித்த பெண்மணி இந்திராணி. சில வருடங்களுக்கு முன்பு கணவரைப் பறி கொடுத்தவர். இவரது ஒரே மகன் சௌந்திர ராஜா, சமீபத்திய ஒரு கைக்குண்டு வீச்சில் இறந்து போனான். மகள் சௌந்திரமணிக்கு ஒரு காலின் பாதப் பகுதி கிடையாது; ஆஸ்பத்திரியில் இருந்த ஜவான்கள் 'சலோ... சலோ...' என்று அவசரப்படுத்தினாலும், இந்திராணியை, "உங்கள் குடும்பத்துக்கு இத்தனை கஷ்டம் கொடுத்துவிட்ட இந்திய ராணுவத்தின் மீது கோபம்தானே?" என்று கேட்டபோது, 'ம்... எல்லாம் தலைவிதி... இனியாவது அமைதி நிலைக்கணும்'' என்கிறார் கலங்கிய கண்களுடன். அவருடைய பெருந்தன்மையும் பரந்த நோக்கும் எனது கண்களையும் கலங்கச் செய்துவிட்டது!

அந்த வார்டு முழுவதுமே, எல். டி. டி. ஈ.— இந்திய ராணுவம் மோதலில் பாதிக்கப்பட்டவர்கள் மயம். மிகுந்த கட்டுப்பாட்டுடன் ராணுவம் செயல்படும்போதே இப்படி என்றால் முழு வேகத் தாக்குதலின் பின் விளைவு எப்படி இருக்கும்! போர் என்பது எவ்வளவு கொடுமையானது என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது.

இந்திய ராணுவம், உணவுப் பொருள்களைப் பல்நோக்குக் கூட்டுறவுக் கடைகள் மூலம் வழங்கி வருவது பற்றிப் பரவலாய்த் திருப்தி தெரிவித்தாலும் ஓரிருவர் இது பற்றிக் குறைகள் சொன்னார்கள். சற்குணநாதன் என்ற சங்கரகாலை வாசி, "ரேஷன் கடைகளில் சில சமயங்களில் பொருள்கள் சரிவரக் கிடைக்கவில்லை,'' என்று கூறினார்.

யாழ்ப்பாணத்தில் இப்போது, காவல் துறையில் உள்ள தமிழர்களைக் கொண்டு, காவல்நிலையங்களை அமைத்து, அவர்களையும் தம் பணிகளில் ஒத்துழைக்கச் செய்கிறது இந்திய ராணுவம்.

யாழ் நகர ஆஸ்பத்திரிக்கு எதிரில் நாம் சந்தித்தவர் ரிச்சர்டு என்கிற டிரைவர். "நாங்கள் ஸ்ரீலங்கா அரசாங்கத்தை நம்பவில்லை; எங்களைச் சிங்கள ராணுவத்தினரிடமிருந்து பாதுகாத்த புலிகளிடமிருந்து ஆயுதங்கள் பறிக்கப்படுகின்றன; இந்திய ராணுவம் இருக்கும் வரை எங்களுக்குக் கவலை இல்லை; ஆனால் இவர்கள் போய்விட்டால் எங்கள் கதி என்ன ஆகுமோ?'' என்று தம் பயத்தைத் தெரிவித்தார்.

நல்லூர் கந்தசாமி கோவில், அமைதிப்

* சாவகச் சேரி — பொதுமக்கள் குழு



படையினரால் சுத்தம் செய்யப்பட்டு, பூஜைகள் சரிவர நடைபெறுகின்றன. மக்கள் வந்து வழிபடுகிறார்கள். கோவிலுக்கு எதிரே சிறு மக்கள் கூட்டம் சேர வைத்து அவர்களுடன் பேசியபோது வெளிப்பட்ட கருத்துக்களின் சாரம்: மக்கள் அமைதிப்படையின் பணிகளை வரவேற்கிறார்கள். அதே சமயம் சாதாரண மக்களைச் சிங்கள ராணுவத்திடமிருந்து காத்த புலிகளின்பால் இன்னும் அனுதாபம் இருக்கவே செய்கிறது. ஆனால் தங்கள் பிரச்னைக்கு, ஒரு முழுமையான தீர்வு காணப்பட்டு, பூரண அமைதி நிலவும் வரை இந்திய ராணுவம் அங்கேயே இருக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். தமிழ்ப் பெண்களை இந்திய ஜவான்கள் கற்பழிக்கிறார்கள் என்ற பிரபாகரனின் குற்றச்சாட்டு பற்றிக் கேட்டபோது, 'அப்படியெல்லாம் இடையவே கிடையாது' என்றார்கள் ஒட்டுமொத்தமாக.

ஆனாலும் புலிகள், மற்றும் ஆயுதங்களைத் தேடும் இந்திய அமைதிப் படை வீரர்கள், பெண்களிடம் தவறாக நடக்க முயற்சி செய்கிறார்கள் என்று ஒருவரும், சில ஜவான்கள், வீடுகளிலிருந்து கோழி முதலியவற்றைக் கொண்டு போய் விடுகிறார்கள் என்று இன்னொருவரும் தெரிவித்தார்கள்.

யாழ் நகரின் நுழைவுப் பகுதியில், புலிகளைச் சரணடையச் சொல்லியும், அதனால் அளிக்கப்படும் சலுகையைப் பெற்றுப் பயனடையக் கோரியும் துண்டுப் பிரசுரங்கள் அமைதிப் படையினரால் விநியோகிக்கப்படுகின்றன.

**சா**வகச்சேரி பகுதி என்பது யாழ்ப்பாணத்துக்கு அடுத்தபடியாகப் புலிகளின் கைவசமிருந்த முக்கியமான இடம். இன்று இப்பகுதியில் பெரிய அளவில் கடைகளெல்லாம் திறக்கப்படவில்லை என்றாலும், மக்கள் நடமாட்டம் சகஜமாய் இருக்கிறது. ரேஷன்

* ரிச்சர்டு (டிரைவர்)



* பிரிகேடியர்
ஜே. எஸ். தில்லான்



கடை முன்பு ஆயிரத்துக்கும் அதிகமான மக்கள் கூடிப் பொருட்களைப் பெறக் காத்திருந்தனர். இப்பகுதியில் சில நாட்களுக்கு முன்பு, குண்டு வீசியதால் சில சிவிலியன்கள் மாண்டனர். ரவி என்கிற இளைஞனைக் கொன்று, கம்பத்தில் கட்டி கீழே, 'பள்ளிகளையும் அரசு அலுவலகங்களையும் பகிஷ்கரியுங்கள். ராணுவத்துக்கு உதவுபவர்கள் தேசத் துரோகிகளாய்க் கருதப்பட்டு மரண தண்டனை வழங்கப்படுவார்கள், எச்சரிக்கை' —என்று எழுதி வைக்கப்பட்டிருந்தது. ''இது டுள்ளன. இப்போது சரணடைந்த புலிகளே, எங்களுக்கு மற்ற புலிகளின் மறைவிடங்கள் பற்றித் தகவல் தருகிறார்கள்; ஆயுதங்கள் பதுக்கி வைத்திருக்கும் இடங்களுக்கு அழைத்துப் போகிறார்கள். வெடி மருந்துப் பொருட்களைக் கைப்பற்றி, அங்கேயே அழித்து விடுகிறோம். ஆயுதங்களை மட்டுமே பறித்துக் கொண்டு வருகிறோம். நமது வீரர்கள் மிகத் திறமையாகச் செயல்படுகிறார்கள்...'' என்றார்.

புறப்படும் முன்பு, அமைதிப்படையின்



• மேஜர் ஜெனரல் ஹர்கிரத்சிங்.



• இந்திராணி தன் குழந்தைகளுடன்.

அமைதிப்படைக்கான மக்களின் ஒத்துழைப்பு அதிகரித்து வரும் வேளையில், மக்களிடையே பீதியை ஏற்படுத்தும் தந்திரம்!'' என்றார் ராணுவ அதிகாரி தில்லான்.

'சாவகச்சேரி மக்கள் குழு' என்கிற பதின்மூன்று பேர் கொண்ட குழு ஒன்று அமைதிப் படைக்கும் மக்களுக்கும் பாலமாய்ச் செயல்படுகிறது. ''எங்கள் உயிரைப் பணயம் வைத்துத்தான் நாங்கள் வாழ்கிறோம்'' என்றார் குழு உறுப்பினர் ஒருவர். ''புலிகள் இளைஞர்கள். இளம் ரத்தம் துடிக்கத்தான் செய்யும். புலிகளை அமைதிப்படுத்தி, பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டும்'' என்று கூறினார் இன்னோர் உறுப்பினர். குழுவில் இடம் பெற்றுள்ள இன்னொருவரான கிறிஸ்துவப் பாதிரியார் ரெவரன்ட் சாம் தாம்பே, மக்களிடையே பீதி உண்டாக்கும் போக்கைக் கண்டித்தார். ''நாங்கள் இங்கே அமைதியைத்தான் விரும்புகிறோம்; அதற்காக இந்தியப் படைக்கு ஒத்துழைப்புத் தருகிறோம்; மக்கள் இந்திய ராணுவ நடவடிக்கைகளை வரவேற்கிறார்கள்'' என்றார் அவர். ரேஷனில் காத்திருந்த மக்களுடன் பேசிய போது அவர்களும் இதையே உறுதிப்படுத்தினார்கள்.

ராணுவ அதிகாரி தில்லான், நிருபர்களுக்குப் புலிகளிடமிருந்து பறிக்கப்பட்ட ஆயுதங்களைக் காட்டியபடி, ''இத்தாலிய, பிரிட்டிஷ், அமெரிக்க ஆயுதங்கள் பிடிபட் பொறுப்பாளரான மேஜர் ஜெனரல் ஹர்கிரத்சிங், ''நமது ராணுவ வீரர்கள் வீடு வீடாகப் புலிகளைத் தேடும் பணிக்குச் செல்லும்போது, நகரில் உள்ள நீதிபதிகள், கல்லூரி ஆசிரியர்கள் போன்றவர்களுடன் தான் சோதனைக்குப் போகிறார்கள். எனவே தவறாக நடந்து கொள்கிறார்கள் என்பது அமைதிப் படைக்கு எதிராகப் பரப்பப்படும் பொய்யான பிரசாரமே'' என்றார்.

பத்திரிகையாளர் சந்திப்பு முடிந்து விடைபெறும் சமயம் மேஜர் ஜெனரலுடன் கைகுலுக்கியபடி இரண்டு கேள்விகள் கேட்டேன்.

''நீங்கள் பறிமுதல் செய்யும் ஆயுதங்களை என்ன செய்வீர்கள்?''

''நாங்கள் கைப்பற்றுவது நம்முடையது.''

''பிரபாகரனைப் பிடித்தால் என்ன செய்வீர்கள்?''

''என் இனிய நண்பா! சரித்திரம் படித்திருக்கிறாயா? போரஸ் மன்னரை வெற்றி கண்ட அலெக்ஸாண்டர் என்ன செய்தார்? அதுதான் இங்கேயும் நடக்கும்'' என்று அழுத்தமாய்ச் சிரித்தார் மேஜர் ஜெனரல் ஹர்கிரத்சிங்.

கட்டுரை, படங்கள்:

**எஸ். சந்திரமௌலி.**



* கூவம்: கரையோர ஆக்கிரமிப்புகள்......

# கூவம்: பழைய குற்றங்களும் புதிய திட்டங்களும்!

கூவம் நதியின் அசுத்தம் பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணை வேந்தர் பி.பி. சுந்தரேசன் முதல், பற்பல பேராசிரியர்களும் மாணவர்களும் பல்வேறு கோணங்களில் ஆய்வு செய்து டாக்டர் பட்டம் வாங்கிவிட்டார்கள். கூவம் சுத்திகரிப்பின் அவசியம் பற்றிப் பல்வேறு அறிஞர்களும் பல்வேறு செமினார்கள் நடத்தி, ஆய்வறிக்கை வாசித்து வலியுறுத்திக் கொண்டே இருக்கிறார்கள். அந்த ஆய்வறிக்கைகளை அடிப்படையாகக் கொண்டு தான் இந்தக் கட்டுரை எழுதப்படுகிறது......



* ஜெயபால் அலாரியா.

உலகின் மூன்றில் இரண்டு பங்குப் பகுதி நீரால்தான் சூழப்பட்டிருக்கிறது என்றாலும் அதில் 97.4 சதவிகிதம் உப்புத் தண்ணீர் என்பதால், அதை நாம் உபயோகப் படுத்த முடியாது. மீதியுள்ள 2.6 சதவிகிதத்தில் 1.8 சதவிகிதத் தண்ணீர் துருவப் பிரதேசங்களில் பனிக்கட்டிகளாக உறைந்து கிடப்பதால் அதையும் நாம் உப

யோகப்படுத்த முடியாது. ஆக, நாம் உபயோகிக்கக் கூடிய நிலையில் உள்ள தண்ணீரின் அளவு 0.8 சதவிகிதம்தான்.

இந்நிலையில் நமது உபயோகத்திற்கான தண்ணீரைத் தரும் ஆறுகளையும் குளங்களையும் ஏரிகளையும் நாம் எந்த அளவுக்குப் போற்றிப் பாதுகாக்கக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பது தெளிவாகப் புரியும். எனினும் இந்தப் பிரக்ஞை நமக்குச் சுத்தமாகவே இல்லை என்பதுதான் நமது துரதிருஷ்டம். இல்லையென்றால் ஆறுகளும் கால்வாய்களும் ஏராளமான ஏரி, குளங்களும் நிறைந்திருந்த ஒரு மாபெரும் பசுமையான பள்ளத்தாக்குப் பகுதி, இப்படி இந்தியாவிலுள்ள நான்காவது பெரிய நகரமான சென்னை மாநகரமாக உருவாகியிருக்கவே முடியாது.

ஆம்; அழகான சிறு சிறு கிராமங்களைக் கொண்ட ஒரு பசுமையான பள்ளத்தாக்குப் பகுதி அழிக்கப்பட்டு நகரமாக உருவாக்கப்பட்டதால்தான், இன்றைய சென்னை நகரின் வடிகால் பிரச்னை ஒரு மாபெரும் பிரச்னையாகவும், அத்தனை சுலபத்தில் தீர்வு காண முடியாததாகவும் இருக்கிறது. மேலும் 1910 - இல் ஆறு லட்சம் மக்கள் தொகைக்கு ஏற்ப வடிவமைக்கப்பட்ட வடிகால் வசதி, இன்றைய நாற்பத்திரண்டு லட்சம் மக்கள் தொகைக்கு ஏற்ப விஸ்தரிக்கப்படவில்லை என்பதும் இப்பிரச்னைக்கு ஒரு முக்கிய காரணம்.



கூவம்: அரும்பாக்கம் அருகில் — சென்னைக்குள் நுழையும்போது...



கூவம்: கடலில் கலக்குமிடம்... "முன்னெல்லாம் இங்கே வலைவிரிச்சா மீன் கிடைக்கும். இப்போ தவக்களை கூட அகப்படலை..." என்கிறார் மீனவர் கஜேந்திரன்.

இக்காரணங்களால்தான், தனது மொத்த பிரயாண தூரமான அறுபத்தைந்து கி.மீ.யில் பதினெட்டு கி. மீ. தூரத்தைச் சென்னை நகருக்குள்ளேயே சுற்றிச் சுழன்று தொடரும் கூவம் நதி அசுத்தப்படுத்தப்படுகிறது. சென்னையிலுள்ள சுமார் 6,600 சிறிய, பெரிய தொழிலகங்களின் கழிவு நீரோடு, சென்னை சென்ட்ரல் ஸ்டேஷன், மத்திய சிறை, அரசினர் பொது மருத்துவமனை, பல்லவன் — திருவள்ளுவர் பஸ் தொழிலகங்களின் கழிவு நீர் எல்லாமே கூவத்தில்தான் விடப்படுகின்றன. இதேபோல் சேப்பாக்கத்திலுள்ள அரசு அலுவலகங்கள், மாநிலக் கல்லூரி மற்றும் ராணிமேரிக் கல்லூரி ஆகியவற்றின் கழிவு நீரும் கழிவுநீர் இணைப்புகளோடு இணைக்கப்படாமல் அப்படியே நேரடியாகப் பக்கிங்காம் கால்வாய் மூலம் கூவத்தில்தான் இணைக்கப்படுகிறது. மேலும் கூவம் அதன் இருபுறங்களையும் ஆக்கிரமித்துள்ள சுமார் இருபதாயிரத்திற்கு மேற்பட்ட குடிசை வாழ் மக்களின் கழிப்பிடமாகவும் இருக்கிறது. ஆண்டுதோறும் சென்னைத் தீவுத் திடலில் நடக்கும் சுற்றுலா வர்த்தகப் பொருட்காட்சிக்கு வந்து செல்லும் சுமார் ஒரு கோடி மக்களாலும் அத்திடலைச் சுற்றியுள்ள கூவம் நதிப் பகுதி அசுத்தப்படுத்தப்படுகிறது.

சென்னைக்குடியிருப்புப் பகுதிகளிலிருந்து வெளியேறும் கழிவு நீர் அனைத்தும் கோயம்பேடு, கொடுங்கையூர், நெசப்பாக்கம், பெருங்குடி ஆகிய இடங்களிலுள்ள சுத்திகரிப்பு நிலையங்களுக்குக் கொண்டு செல்லப்பட்டு, அங்குள்ள புல் பண்ணைகளுக்குப் பயன்படுத்தப்படுகிறது என்று கொள்கையளவில் கூறப்பட்டாலும் எந்த அளவுக்கு அங்கே கழிவு நீர் கொண்டு செல்லப்பட்டுப் பயன்படுத்தப்படுகிறது — சுத்திகரிக்கப்படுகிறது என்ற கேள்விகளுக்குச் சரியான பதில் இல்லை. எனவே, ஏராளமான நீரேற்று நிலையங்கள் இருந்தாலும் பெருமளவு நீர், சுத்திகரிப்பு நிலையங்களுக்கு அனுப்பப்படாமலேயே கூவத்தில் கலக்கவிடப்படு

கிறது என்பதுதான் உண்மை. இவற்றோடு, ஆங்காங்கே சலவைத் தொழிலாளர்கள் துணி துவைப்பதால் ஏற்படும் அசுத்தமும் கால் நடைகளின் சாணமும் ஏராளமாகக் கலப்பதால் அசுத்தத்தின் அளவு அபாய கட்டத்தை எட்டியுள்ளது.

அசுத்தம் அதிகமாகி, கூவம் நீரில் ஆக்ஸிஜன் அளவு மிகமிகக் குறைந்துபோனதால் மீனினங்கள் உயிர்வாழ முடிவதில்லை. உயிரோடு இருக்கும் ஒரு மீனைப் பிடித்து வந்து கூவத்தில் போட்டால் இரண்டொரு மணி நேரம்கூட அது உயிரோடு இருக்க இயலுமா என்பது சந்தேகமே. இதுமட்டுமல்லாமல் நோய்களைப் பரப்பும் பாக்டீரியாக்களும் ஏராளமான உள்ளன. பரிசோதனை செய்து பார்த்த போது, நூறு மில்லி கூவம் நீரில் சுமார் ஒரு லட்சம் முதல் ஒரு கோடி வரை நோய்க் கிருமி இருப்பதாகத் தெரிய வந்துள்ளது. அதாவது சாதாரணமாக அனுமதிக்கப்படும் கழிவு நீரில் உள்ள பாக்டீரியாக்களின் அளவை விடக் கூவம் நீரில் ஆயிரம் சதவிகிதம் அதிகம் என்று கணக்கிட்டிருக்கிறார்கள்.

1972 — முதல் 86 — வரை எடுக்கப்பட்ட கணக்கின்படி சென்னை நகரில் 24, 764 பேர் காலராவிலும் 38,157 பேர் வயிற்றுப் போக்கிலும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். 71 — முதல் 78 — வரையிலான காலத்தில் 3,611 பேர் மஞ்சள் காமாலையால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். மேலும் சென்னையிலுள்ள சுமார் ஒன்பதாயிரம் பேருக்கு யானைக்கால் வியாதி தொடர்பான மருத்துவக் கவனிப்புத் தேவை என்று அந்த ஆய்வு கூறுகிறது. எல்லாவற்றுக்கும் கூவத்தின் அசுத்தமே காரணம்.

சாதாரணமாக ஒரு நதியில் அசுத்தங்கள் செய்யப்பட்டாலும் சூரிய ஒளி, வெள்ளப் பெருக்கு ஆகியவற்றால் அது தன்னைத்தானே சுத்திகரித்துக் கொள்ளும் தன்மை கொண்டதுதான். ஆனால் கூவம் நதியைப் பொறுத்த வரையில், கற்பனைக்கெட்டாத அளவுக்கு அசுத்தப்படுத்தப்படுவதால் இயற்கைச் சுத்திகரிப்பு போதுமானதாக இல்லை. மேலும் கூவம் நதி கடலோடு கலக்கும் முகத்துவாரத்தில் ஏராளமான மணல் அடைப்பு இருப்பதால் வெள்ளப் பெருக்கு நேரத்தில்தான் அந்த மணல் அடைப்பை உடைத்துக் கொண்டு கூவம் கடலோடு கலக்க இயலுகிறது. மற்ற காலங்களில் கூவம் குட்டை போல் தேங்கிக் கிடந்து சுகாதாரக் கேட்டை விளைவிக்கிறது.

இந்த நிலையில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தத்தான் 68 — 72 - ஆண்டுகளில் 2.29 கோடி செலவில் ஒரு திட்டம் போடப்பட்டது. அத்திட்டம் முகத்துவாரத்திலுள்ள மணல் அடைப்பை நீக்குவதிலேயே முக்கிய கவனம் செலுத்தியது. கூடவே, சேத்துப்பட்டிலிருந்து முகத்துவாரம் வரையிலான நதிக்கரையோரங்களில் சிமெண்ட் பலகைகள் பொருத்தப்பட்டன. முகத்துவாரம் அருகில் ஆங்காங்கே படகுத் துறைகளும் அமைக்கப்பட்டன. இருந்தபோதிலும் கூவம் சுத்தமான பாடில்லை.

காரணம், அத்திட்டத்தில் மேலும் மேலும்



• டெபோரா தியாகராஜன்

# "நட்டிக் கேட்கும் உரிமை மக்களுக்கு உண்டு!"

இந்திய தேசிய கலாசார அறக்கட்டளை (Indian National Trust for Arts and Cultural Heritage) என்னும் சுயாட்சி நிறுவனத்தின் அமைப்பாளர் திருமதி. டெபோரா தியாகராஜன். அமெரிக்காவில் பிறந்த அவர் திருமணத்தின் மூலம் இந்திய மருமகளாகச் சென்னையில் குடியேறி விட்டார். அவருடன் ஒரு சந்திப்பு......

நிருபர்: 'இன்டாக்' அமைப்பு கூவம் பற்றிய பிரச்னைக்கு முக்கியத்துவம் தரக் காரணம் என்ன?

டெபோரா: 'இன்டாக்'கின் முக்கியமான குறிக்கோள் சுற்றுப் புறச் சூழல் அசுத்தங்கள் கூவத்தில் கலப்பதைத் தடுப்பதற்கான அடிப்படை நடவடிக்கை புறக்கணிக்கப்பட்டதுதான். அதோடு அத்திட்டம் முழுக்க முழுக்கப் பொறியியல் வல்லுனர்களைக் கொண்டே வகுக்கப்பட்டதால், இயற்கை நிகழ்வுகளைக் கருத்தில் கொண்டு, அதற்குத் தகுந்தாற்போல் திட்டமிட முடியாமலும் போனது.

கூவம் முகத்துவாரத்தில் உள்ள மணல்

மாசுபடாமல் பாதுகாப்பதுதான். சென்னை நகரைப் பொறுத்தவரை கூவம் ஆறும், மற்றுமுள்ள அடையாறு, பக்கிங்காம் கால்வாய் போன்றவையும் சென்னை நகர மக்களின் சுகாதார வாழ்க்கையை எந்த அளவுக்கு மோசமாய்ப் பாதிக்கிறது என்பது யாவரும் அறிந்த ஒன்று. எனவே கூவம் நதி மற்றும் அதுபோன்ற நீர் வழிகளைச் சுத்தப்படுத்த வேண்டியதன் அவசியத்தைக் கருதி அதற்கான பணிகளில் ஈடுபடுகிறது.

நிருபர்: இது விஷயமாய் நீங்கள் என்ன செய்துள்ளீர்கள்?

டெபோரா: ஜனநாயகத்தில், மக்களின் பணி என்னவென்பதே இங்குள்ள பலருக்குத் தெரியவில்லை. அரசாங்கமே எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என எதிர்பார்க்கிறார்கள். இது தவறு. தம் தேவை என்னவோ, அதைச் சொல்லிவிட்டு, அதனைச் செயல்படுத்த அரசுக்கு முழு ஒத்துழைப்பும் தர வேண்டும். அவர்கள் செய்யத் தாமதப்படுத்தினாலோ, தவறினாலோ, தட்டிக் கேட்கிற உரிமையும் மக்களுக்கு உண்டு. எனவே இந்த நிலைமையைப் பற்றி மக்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தும் பணியில் நாங்கள் ஈடுபட்டிருக்கிறோம்.

நிருபர்: விழிப்புணர்ச்சியூட்ட நீங்கள் என்னென்ன வழிகளில் முயலுகிறீர்கள்?

டெபோரா: கூவம் நதி சுத்திகரிப்புப் பணியை உடனடியாய்த் துவக்கக் கோரி சென்னை நகர மக்களிடமிருந்து பத்து லட்சம் கையெழுத்துக்கள் வாங்கி அரசாங்கத்துக்கு அனுப்பும் பணியில் ஈடுபட்டிருக்கிறோம். அதன் கூடவே கையெழுத்துப் போடும் ஒவ்வொருவரிடமிருந்தும் ஒவ்வொரு ரூபாய் நன்கொடை பெற்று கடைசியில் அந்தப் பணத்தைக் கூவம் சுத்திகரிப்புப் பணிக்காக அரசாங்கத்திடம் ஒப்படைக்கவும் இருக்கிறோம். இதுவரை சுமார் ஒரு லட்சம் பேரிடம் கையெழுத்துக்களும் பணமும் வாங்கி விட்டோம்.

நிருபர்: கையெழுத்து வேட்டை தவிர வேறென்ன செய்கிறீர்கள்?

டெபோரா: பொது மக்கள் தவிர, மாணவ, மாணவியரிடமும் சுற்றுப் புறச் சூழல் பாதுகாப்புப் பற்றி முகாம்கள் நடத்தி எடுத்துரைத்து வருகிறோம். இது தவிர, கடந்த வருட சுற்றுலா வர்த்தகப் பொருட்காட்சியில் ஓர் அரங்கை நிறுவிப் பொது மக்களிடமும் சுற்றுப் புறச் சூழல் பாதுகாப்பின் அவசியத்தை எடுத்துரைத்தோம்.

நிருபர்: மக்கள் விழிப்புணர்வு பெற்று விட்டால், கூவம் சுத்தமாகி விடுமா?

டெபோரா: மக்கள் விழிப்புணர்ச்சி பெற்றால், பிரச்னையின் தீவிரம் அரசாங்கத்தால் உணரப்படும். அதனால் அரசாங்கம் விரைவாய்ச் செயல்படும். இதில் அரசாங்கத்துடன் லயன்ஸ் கிளப்கள், ரோட்டரி கிளப்கள் போன்ற சமூக சேவை நிறுவனங்களும் பங்கேற்க வேண்டும் என விரும்புகிறோம்.

நிருபர்: நீங்கள் கூவத்தை சுத்தப்படுத்தும் திட்டத்தில் இத்தனை தீவிரமாய் இருக்கிறீர்கள் என்பது தமிழக அரசுக்குத் தெரியுமா?

டெபோரா: தெரியும். நாங்கள் அரசாங்கத்தின் பல்வேறு துறைகளின் உயர் அதிகாரிகளுடனும் இது பற்றிப் பேசியிருக்கிறோம். ஆனாலும் அரசாங்கத்தின் பல துறைகள் இதில் சம்பந்தப்பட்டுள்ளன (பொதுப் பணித்துறை, நீர்ப்பாசனத்துறை, குடிநீர் வடிகால் வாரியம் என்று பல) என்பதால் கோப்புகள் எதிர்பார்க்கும் அளவுக்கு வேகமாய் நகரவில்லை.

நிருபர்: இதுபற்றி முதலமைச்சருடன் பேசியிருக்கிறீர்களா?

டெபோரா: முதல்வரைச் சந்திக்க முயற்சி செய்து கொண்டிருக்கிறோம்.

நிருபர்: கங்கையைச் சுத்தப்படுத்தும் திட்டத்தில் தீவிர ஆர்வம் காட்டும் பிரதமரிடம் இதுபற்றிப் பேசினால் பலனிருக்குமே!

டெபோரா: உண்மைதான். ஆனால்கூவம் பிரச்னை என்பது தமிழகம் முழுமைக்கும் கூட இல்லை; சென்னை மாநகரம் மட்டுமே சம்பந்தப்பட்ட விஷயம். இது முழுக்க முழுக்க மாநில அரசு சம்பந்தமான விஷயம். எனவே நாமும் மாநில அரசைத்தான் வற்புறுத்த வேண்டும்.

பேட்டி: ஜூலி

அடைப்பை நீக்குவதென்பது ஏதோ ஒரு நாளில் — ஒரு மாதத்தில் செய்து முடித்து விட்டுச் சாதனை விழாக் கொண்டாடுகிற விஷயம் அல்ல. அது ஆண்டு முழுவதும் நடந்து கொண்டே இருக்க வேண்டிய பணி.

காரணம், கடலுக்குள் நிலவும் நீரோட்டத்தின் சக்தி அத்தகையது. சென்னையை யொட்டிய கடலில் நீரோட்டச் சக்தி என்பது வடக்கிலிருந்து தெற்காகச் சுழலும் தன்மை படைத்தது. எனவே, கடலுக்குள் ஒரு தடுப்பு ஏற்படுகிற போது அத்தடுப்பிற்கு வடபகுதியிலுள்ள மணலையெல்லாம் சிறுகச் சிறுக இந்த நீரோட்டம் அடித்துக் கொண்டு வந்து தெற்குப் பகுதியில் குவித்துக் கொண்டேயிருக்கும். இதன் காரணமாகத்தான் சென்னைத் துறைமுகம் என்ற சிறு தடுப்பிற்கு வடபுறமுள்ள திருவொற்றியூர்ப் பகுதிகளில் மணல் அரிப்பு ஏற்பட்டு, தென்புறமுள்ள கூவம் முகத்துவாரம் அடைபட்டுக் கொண்டே வருகிறது. இன்னும் சொல்லப்

போனால், சென்னைத் துறைமுகம் என்ற சிறு தடுப்பு இருப்பதால்தான் — வட பகுதியில் மணல் அரிப்பு ஏற்பட்டு அம்மணல் தென் பகுதிக்கு வந்து சேருவதால்தான் — மெரீனா கடற்கரை என்பது உலகிலேயே இரண்டாவது மிக நீண்ட கடற்கரையாகத் திகழ்கிறது என்பது இயற்கையியல் வல்லுனர்களின் கருத்து. (இந்த இயற்கைச் செல்வத்தை நாம் துப்புரவாகவும் அழகாகவும் பராமரிக்கிறோமா என்பது வேறு விஷயம்.)

ஆகமொத்தம், இயற்கையாக நிகழும் இந்த முகத்துவார மணல் அடைப்பை நீக்குவதில் மட்டும் கவனம் செலுத்தினால் எப்படி போதுமானதாக இருக்கும்? அசுத்த சாக்கடை நீரைக் கூவத்தில் கலக்க விடுவதைத்தடுப்பதில்தீவிர கவனம்செலுத்துவது தான் கூவம் சுத்திகரிப்பின் தலையாய பணி.

இவை பற்றியெல்லாம் நமது அரசாங்கம் அவ்வளவாகக் கண்டு கொள்ளாத ஒரு நிலையில்தான், கூவம்சுத்திகரிப்பின் அவசியத்தை உணர்ந்த பல்வேறு அறிஞர்களும் இந்திய தேசியக் கலாசார அறக்கட்டளை (INTACH) யும் இணைந்து அரசை வற்புறுத்தினார்கள். ஏராளமான கருத்தரங்குகளை நடத்திக் கடுமையான விமர்சனங்களோடு ஆக்க பூர்வமான திட்டங்களையும் வெளியிட்டார்கள். இந்த நெருக்குதலைத் தாங்க முடியாமல் தான் அரசும் சிறப்புத் திட்ட ஆலோசனைக் குழு ஒன்றை நியமித்துப் பரிந்துரை செய்யச் சொன்னது.

அந்தக் குழுவும் முகத்துவார மணலைத் தொடர்ந்து அகற்றுவது; கரையோர ஆக்கிரமிப்பாளர்களை அகற்றி மாற்று இடங்களில் குடியேற்றுவது; இரு மருங்கிலும் மரம், செடி கொடிகளைப் பயிரிடுவது; தொழிற்சாலைக் கழிவுநீர் கலக்காமல் தடுப்பது... என்று பல்வேறு திட்டங்களைப் பரிந்துரை செய்திருக்கிறது.

சுத்தம் செய்யப்படாத கழிவுநீரிலிருந்து ஏராளமான எரிவாயு உற்பத்தி செய்து, நலிந்த பிரிவினருக்கும் சத்துணவுக் கூடங்களுக்கும் மலிவு விலையில் வழங்கலாம் என்பதும் சில வல்லுனர்களின் ஆலோசனை.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் விலங்கியல் பேராசிரியரான டாக்டர் ஜெயபால் அஸாரியா வேறொரு வித்தியாசமான ஆலோசனையையும் சொல்லியிருக்கிறார்: "கடலாழி என்ற ஒருவகைக் கிளிஞ்சல் (Mussels) உயிரினங்கள் இயற்கையாகவே நீரிலுள்ள அசுத்தங்களை உண்டு உயிர் வாழும் தன்மை கொண்டவை. இவற்றைக் கூவம், அடையாறு போன்றவற்றில் ஏராளமாக வளர்த்தால், முகத்துவாரங்கள் மணல் மூடி அடைபட்ட காலங்களிலும் தேங்கி நிற்கும் தண்ணீரைச் சுத்தப்படுத்தி விடும். மேலும் இந்தக் கடலாழிகள் மிகச் சிறந்த சத்துணவாகவும் பயன்படும். மேல் நாடுகளில் இதற்கு ஏகக் கிராக்கி. இங்குள்ள குடிசைவாழ் மக்கள் கூடத் தாங்கள் மாமிசத்திற்காகச் செலவிடும் பணத்தில் நாற்பது சதவிகிதத்தை இதற்காகச் செலவிடத் தயாராய் இருக்கிறார்கள் என்பதை நாங்களே எடுத்த ஒரு புள்ளி விவரத்தில் தெரிந்து கொண்டோம். நல்ல முறையில் வளர்த்து அறிமுகப்படுத்தினால் இதை அசைவப்பிரியர்கள் அனைவருமே விரும்பிச் சாப்பிடுவார்கள்; அந்த அளவுக்கு ருசியானவை..." என்கிறார் அவர்.

ஆக, பழைய குற்றங்களையெல்லாம் களைந்தெறிந்துவிட்டுப் புதிய திட்டங்களைச் செயல்படுத்துவதன் மூலம் கூவத்தைச் சிறப்பாகச் சுத்திகரிக்க முடியும்; சென்னை மாநகரையும் அழகுமிக்கதாக மாற்ற முடியும் என்பதில் சந்தேகமேயில்லை. ஆனால் அதற்குரிய மனோதிடமும், தீர்க்கதரிசனமும், செயலாற்றலும், நேர்மைத் திறனும் ஆட்சியாளரிடம் உண்டா என்பதுதான் சந்தேகம்!

— **இளங்கோவன்**

அட்டையில் கூவம் நதி மற்றும் திருமதி டெபோரா தியாகராஜன். வண்ணப் படங்களும் மற்ற படங்களும்:

**கே. வி. ஆனந்த்**

---



**கூட்டுறவு வங்கி அதிகாரி: "உங்களுக்கு மாடு கடனுதவியாகத் தருகிறோம், மாட்டுத் தீவனம் தருகிறோம், வறட்சியை முன்னிட்டு வைக்கோலும் கடனுதவியாகத் தர எண்ணியுள்ளோம்."**

**"சார்... மாடு குடிக்கிறதுக்குத் தண்ணி கடனுக்குத் தருவீங்களா சார்!"**

**— ஆர். கே. லிங்கேசன்.**

**அமைச்சர்: "ரொம்ப அநாகரீகம்!"**

**அரசன்: "எது அமைச்சரே?"**

**அமைச்சர்: "செத்துப்போன சிற்றரசன் சின்னப்பவர்மனின் பிணத்தைப் பார்த்து 'ஒழுங்கா கப்பம் கட்டிக்கிட்டிருந்தஒரே ஆள் நீதான்; நீயும்போயிட்டியா' ன்னு நீங்க புலம்பியதுதான்!"**

**— உ. ராஜாஜி**






# இந்து எக்ஸ்போர்ட்ஸ்

(a unit of Indu group companies)

155, வடக்கு உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017.
போன்: 445529 & 447333. டெலக்ஸ்: 8868 TANEX-IN

கீழ்கண்ட வட்டி விகிதங்களில்
பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

பின் தேதியிட்ட வட்டி காசோலைகள்
முன்னதாகவே அளிக்கப்படுகிறது.

3 வருடங்கள்
**20%**

அன்பளிப்பு
22 ct. ஸ்ரீதேவி
மூக்குத்தி

2 வருடங்கள்
**19%**

1 வருடம்
**18%**

Deposits will be accepted upto a limited numbers only, first come first served basis

with compliments from :

இந்து லீசிங் & பைனான்ஸ் லிமிடெட்
இந்து பைனான்சியர்ஸ்
இந்து சிட் பண்ட்ஸ் (மதுரை) பிரைவேட் லிமிடெட்
தமிழ்நாடு எக்ஸ்போர்ட்ஸ் (பி) லிமிடெட்

154, வடக்கு உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-17. போன்: 447888
220, N.S.C. போஸ் ரோடு, G.T. சென்னை-1. போன்: 25901 & 25178
194, வக்கீல் புது தெரு, மதுரை-625 001. போன்: 34940 & 31351
106, பெரிய தெரு, திருவண்ணாமலை-606 601. போன்: 2681
22, வணிகர் தெரு, காஞ்சிபுரம்-631 501. போன்: 3048

TAS

**GROW RICH WITH INDU**

# அருணோதயம் தரும்

## அற்புதமான நாவல்கள்! அருமையான கதைகள்!

### ராஜேஷ்குமார் எழுதியவை

| | ரூ. பை |
|---|---|
| அருண், ஆஷா, ஒரு அக்டோபர் மாதம் | 18.00 |
| மாண்டவன் கட்டளை | 16.00 |
| ஜன, கண, மனோ | 14.00 |
| ஒரு ஆகஸ்ட் மாத ஆகாயம் | 17.00 |
| கோகிலாவும் ஒரு கோடைக்காலமும் | 15.00 |
| எங்கிருந்தோ ஆசைகள் | 20.00 |
| உயிரெடுக்கும் உதடுகள் | 15.00 |
| இருள், பொருள், இன்பம் | 15.00 |
| நான் தேடும் ரோஜாப்பூ | 17.50 |
| மற்றவை நள்ளிரவு 1.05-க்கு | 17.00 |
| ஒரு ஜனவரியின் ஞாயிற்றுக்கிழமை | 12.00 |
| கனவுகள் இங்கே | 15.00 |
| கனவின் விலை பத்து லட்சம் | 11.00 |
| ஒரு விடியற்காலை விபரீதம் | 11.00 |
| எங்கும் ஹேமா, எதிலும் ஹேமா | 12.00 |
| கண்ணுக்குத் தெரியாத ஒரு வலை | 12.00 |

### ராஜேந்திரகுமார் எழுதிய!

| | |
|---|---|
| ஒரு ஆரம்பம் பல முடிவுகள் | 15.00 |
| தாயுமானவள் | 14.00 |
| கெஞ்சும் சலங்கை | 14.00 |
| மறுபடியும் மரணம் | 10.00 |
| மின்னல் இடி பூகம்பம் | 12.50 |
| நிழலாக ஒருத்தி | 10.00 |
| ரயிலில் வந்த மயில் | 12.00 |
| கோடையில் பனிமழை | 18.00 |
| மகளிர் மட்டும் | 11.00 |
| ஊமைக் கரு | 10.00 |
| பாதி மனிதன் | 12.50 |
| ஒரு இரவு நேர ஒத்திகை | 15.50 |

### 'சுபா' எழுதிய புதிய நாவல்கள்

| | |
|---|---|
| சின்னச் சின்னக் கனவுகள் | 17.00 |
| மறக்காதே மன்னிக்காதே | 14.00 |
| மயானப் பிரசவங்கள் | 14.00 |
| நிலவே நீயும் விலகாதே | 14.00 |
| மேலே சில கழுகுகள் | 20.00 |
| சிகப்பாய் சில மேகங்கள் | 18.00 |

### ரமணிசந்திரன் எழுதியவை

| | |
|---|---|
| மெல்லத் திறந்தது கதவு | 10.00 |
| மானே! மானே! மானே! | 15.00 |
| ஒரு கல்யாணத்தின் கதை | 10.00 |
| மயங்குகிறாள் ஒரு மாது | 20.00 |
| காதலெனும் சோலையிலே | 20.00 |
| வெண்மையில் எத்தனை நிறங்கள் | 22.00 |
| தொடுகோடுகள் | 12.00 |
| விடியலைத் தேடும் பூபாளம் | 15.00 |
| நாதசுர ஓசையிலே | 10.00 |
| கண்ணே கண்மணியே | 14.00 |
| ஒரு மலர் | 15.00 |
| மதுமதி | 10.00 |
| நினைப்பதெல்லாம் நடந்து விட்டால் | 9.00 |
| லாவண்யா | 12.00 |
| அவனும் அவளும் | 12.00 |

### அனுராதா ரமணன் எழுதியவை

| | |
|---|---|
| நெருப்பாக நீ | 20.00 |
| தொடச் சொல்லும் தொடுவானம் | 16.00 |
| பெண்மையே பேச வா | 18.00 |
| நமக்குள் இருக்குது ரகசியம் | 10.00 |
| உறவுகள் புரியும்போது | 9.00 |
| விளக்கை வெறுக்கும் விட்டில்கள் | 16.00 |
| முதல் காதல் | 12.00 |
| ஆசைக்கிளியே அழகிய ராணி | 12.00 |
| இந்த இதழில் ஆரம்பமாகிறது | 12.50 |
| ராத்திரி வந்த மான் | 22.00 |
| தாகம் தீர்க்காத மேகங்கள் | 15.00 |
| ஆகாயம் மண்ணில் வரும் | 10.00 |
| இனியும் என்னைத் தொடராதே | 18.00 |

### பட்டுக்கோட்டை பிரபாகர்

| | |
|---|---|
| துப்பாக்கி விடு தூது | 10.00 |
| மன்னிக்கவும் வேறு வழியில்லை | 8.00 |
| நிற்காதே கவனிக்காதே | 15.00 |

### ஜோதிடக்கலைக்கோ ஏ.எம்.பிள்ளை எழுதிய

| | |
|---|---|
| ஜோதிடக் களஞ்சியம் — 7 பாகங்கள் | 98.00 |
| ஆயுள் பலம் அறிவது எப்படி? | 8.00 |
| உங்களுக்கு குழந்தை பாக்கியம் உண்டா? | 6.00 |
| புதிய மனையடி சாஸ்திரம் | 8.00 |

**இன்னும் ஏராளமான நாவல்கள், சிறுவர் நூல்கள் தேவையான புத்தக விலையுடன் பதிவுத் தபால் செலவுக்கு ரூ. 6 சேர்த்து மணி யார்டர் அனுப்பவும்.**

# அருணோதயம்

3, கௌடியா மடம் சாலை,
இராயப்பேட்டை, சென்னை — 600 014.

# ஆனந்த்



ஊர் முழுக்க ஆனந்த், ஆனந்த் என்று ஒரு பாடகர் பின்னால் பைத்தியமாய்ச் சுற்றுகிறது. முதுகில் ஆட்டோகிராஃப் வாங்கிக் கொள்ளும் லெவலுக்குக் கூடப் போகப் பெண்கள் தயாராகிறார்கள். பாடகருக்கு நீச்சல் கற்றுக் கொடுக்கப் பெண்கள் ஓ.கே. சொல்கிறார்கள். ஆனால் ஆனந்திற்கு அந்தப் பெண்கள் எல்லாரும்தூசு மாத்திரம். ஹோட்டல் ரிசப்ஷனிஸ்ட் லதாவை. அவர் தம் காதல் பைனாகுலர் மூலம் பார்க்கிறார். முதலில் மோதல். அப்புறம் காதல். பிற்பாடு ஊடல். அதற்கப்புறம்...

பிரபுதான் பாடகர். ராதாதான் ரிசப்ஷனிஸ்ட். இருவரையும் வைத்துக் கொண்டு ஒரு வசந்தமாளிகையைக் கட்ட முயற்சி செய்திருக்கிறார்கள்.

தந்தி சேவகர்களை க்யூவில் நிற்க வைத்துக் காதலைச் சொல்லுவது, காரின் கண்ணாடியில் காதலைச் சொல்லுவது, அப்புறம் ராதா கேட்டுக் கொண்டபடி தெருவைச் சுத்தம் செய்வதில் காதலைச் சொல்லுவது என்று வித்தியாசமாக சிச்சுவேஷன்களைத் தேடியிருக்கிறார்கள்.

காதல் உருவாகும் வரை இளமை, கிளுகிளுப்பு, கிண்டல், சீண்டல் என்று படத்தை நகர்த்திக் கொண்டு போவதால், கதை நின்றாலும், கடிகார முட்கள் வேகமாக நகர்ந்து விடுகின்றன.

ஏதோ ஒரு மொட்டைக் கடிதம் வரப் போக, தூய்மையான காதல் கொண்ட காதலன் அதை நம்பி, ஆராயத் தொடங்குகிறாரே — அங்கே பிரபு அல்ல — பாடகர் ஆனந்த் கொஞ்சம் சறுக்கி விடுகிறார்.

அப்புறம் காதலனும் காதலியும் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளாமலேயே போய் ஒரு கொலை, ஒரு மரணம், ஒரு ஜெயில் தண்டனை என்று கதை திரும்பி... ப்ச்... சோகம்!

பிரபு டான்ஸ் ஆடுகிறார். பரவாயில்லை. பாட்டுக்கு வாயசைக்கிறார். பரவாயில்லை. ஆனால் காதலை வெளிப்படுத்துவதற்கென்று ஒரு மென்மையான முக பாவம் வைத்திருக்க வேண்டும். அது நம் ஹீரோவிடம் மைனஸ். அதனாலேயோ என்னவோ, பிரபுவை விட ராதா ஒரு படி உயரமாகப் போய் விடுகிறார் (நடிப்பில் நடிப்பில்).

'காதலுக்கு என்ன தடை வந்தாலும் எல்லாவற்றையும் எதிர்த்து ஊழல் போல ஸ்டெடியாக இருக்க வேண்டும்' — வசனம் பேசியிருப்பவர் யார் என்று தெரிந்திருக்குமே? கரெக்ட், சோதான்! அவ்வப்போது அரசியல் நெடி.

சௌகார் ஜானகி, ஒய். ஜி. மகேந்திரன், வெண்ணிற ஆடை மூர்த்தி இவர்களை எல்லாம் பார்த்தாலே சிரிப்பு வரும் என்பதற்காக ஆட்டத்தில் சேர்த்துக் கொண்டு விட்டார்கள் போலிருக்கிறது.

பாட்டு வரிகளை விட இளையராஜாவின் தடதட தம் தான் காது ஜவ்வுகளைக் கிழிக்க முயற்சி செய்கிற மாதிரி தோன்றுவதால் —

இசையமைத்த இளையராஜா நிற்கிறார். கவிதை எழுதிய கங்கை அமரன் படுத்து விடுகிறார்.



ஓஹோஹோ என்று சொல்கிற மாதிரியும் இல்லை.

உதட்டைப் பிதுக்கிக் கொள்ளுகிற மாதிரியும் இல்லை.

— ஜெயமன்மதன்


நல்ல காலம் பொறக்குது!
கூட்டணி பொறக்குது!...
ராஜீவுக்கு எதிரா
கூட்டணி பொறக்குது!


40% இடம்
70%
60%
50%
65%
90%க்கு குறையக் கூடாது!
ஜாதி வாரி
இடம் கோரி
முதல்வருடன்
பேச்சு-வார்த்தை


காவிரி நதி நீர் ஒப்பந்தம்
ப.சிதம்பரம் பேச்சு
தி.மு.க. ஆட்சி சரியாகச் செயல்பட்டது!
எங்களைக் குறை சொல்வது குற்றம்!
உங்களைக் குறை சொல்வது... தி.மு.க.வை..
தமிழ் மக்கள்



கல்கி

1987 டிசம்பர் 13
மலர் 46 இதழ் 20
பிரபவ கார்த்திகை 27



# வரியைக் ''குறைக்கிறார்'' வீரப்பன்!

அமைச்சர் வீரப்பன், வீட்டு வரி விதிப்புக் கொள்கையை அறிவித்ததோடு அந்தக் கொள்கைக்கு பலத்த எதிர்ப்புத் தோன்றியதும், 'இது வரி உயர்வு அல்ல; வரி குறைப்பு' என்று ஒரு விளக்கம் கூறிக் கண் துடைப்புச் செய்ய முயல்கிறார். இவரது விளக்கம் என்னவெனில், தமிழகத்திலுள்ள நகராட்சிகளில் பல, சொத்து வரியை எக்கச்சக்கமாக உயர்த்தி நோட்டீஸ் அனுப்பிவிட்டன; இவர் அந்த அநீதியைக் களைந்து, சொத்து வரியை நியாயமான அளவில் உயர்த்த ஒரு கொள்கையை உருவாக்கியுள்ளார் என்பதே.

நகராட்சிகள் கொணர இருந்த அநீதியான வரி உயர்வைத் தடுத்த அளவில் வீரப்பனுக்கு நாம் நன்றி செலுத்தலாம். ஆனால் இவருடைய கொள்கைப்படியே பார்க்கப் போனாலும், வீட்டு வரி, ஒரு மடங்கும், இரு மடங்கும், மும்மடங்குமாக உயரவிருக்கிறது. இது எப்படி வரி குறைப்பாகும்? அல்லது தர்ம நியாயமான வரி உயர்வாகும்? பல ஆண்டுகளுக்கு ஒரு முறை ஐந்து சதம் அல்லது ஆறு சதம் வரி உயரலாம். நூறு சதம், இருநூறு சதம், முந்நூறு சதம் வரி உயர்வு என்பது புரட்சித் தலைவர் ஆளும் தமிழ்நாட்டின் வீரப்ப நியாயமாகத்தான் இருக்க முடியும்!

வீரப்பன் இன்னொரு விஷயமும் ''தெளிவு'' படுத்துவதாகக் கூறுகிறார். அதாவது **Property Tax** என்பதை வீட்டு வரி என்பதாகப் பலர் குழப்பிக் கொள்கிறார்கள்; அது வீட்டு வரி அல்ல, சொத்து வரியே என்கிறார். சொத்து வரி என்பதை இவர் வீடு, வீடு அமைந்துள்ள நிலம் ஆகிய இரண்டையும் சேர்த்துக் கணக்கிடுவதாக நாம் அனுமானிக்கலாம். ஆனால் நிலம் என்பது நகர்ப்புறங்களைப் பொறுத்தமட்டில், விற்கப்படும்போதுதான் மதிப்புடையது. மற்றபடி அதிலிருந்து வருமானம் பெறுவது மிக அபூர்வம். நிலத்தில் வீடு அல்லது கொட்டகை எழுப்பி வாடகைக்கு விடும்போதுதான் வருமானம் கிடைக்கிறது. நிலத்தை விற்கப் போனாலோ, அரசு, ஸ்டாம்பு பேப்பர், ரிஜிஸ்தர் கட்டணம், மூலதன மதிப்பு உயர்வு வரி (**Capital gains tax**) என்று பலவிதங்களிலும் வருவாய் பெற்றுவிடுகிறது. இதுதவிர நகர்ப்புற நில உச்ச வரம்புச் சட்டமும் நகர்ப்புற நில வரி விதிப்பும் உள்ளன. மேலும் ஒருவர் வைத்திருக்கும் சொத்துக்கு மத்திய அரசின் செல்வ வரி வேறு இருக்கிறது. இவற்றுக்கும் மேலாக வீரப்பன், சொத்து வரி என்பது வீட்டு வரி மட்டுமல்ல, வீட்டு மனையையும் உள்ளடக்கிய வரி என்று வாதாடுவது இரட்டை வரி விதிப்புக்கு ஒப்பாகும்.

வீட்டு வரி விதிப்பில் ஏராள லஞ்ச ஊழல் தாண்டவமாடுகிறது என்பது நகராட்சி அல்லது மாநகராட்சியுடன் போராடும் வீட்டுச் சொந்தக்காரர்களுக்குத் தெரியும். வீட்டுச் சொந்தக்காரர்கள் தாங்களே சொத்து மதிப்பீடு செய்து நகராட்சியிடம் அளிக்கலாம் என்ற ஏற்பாடு மட்டுமே லஞ்ச ஊழலைக் குறைத்துவிடாது. இதிலிருந்து விடுதலை பெற ஒரே வழி, வீட்டின் விஸ்தீரணத்தை (**Built up area**) அடிப்படையாகக் கொண்டு வீட்டுவரியைக் கணக்கிடுவதுதான். ஒரு வீட்டைக் கட்டும்போது அல்லது மாற்றி அமைக்கும்போது நகராட்சியிடம் 'பிளான்' சமர்ப்பித்து ஒப்புதல் பெற வேண்டியிருப்பதால் அதிகாரிகளும் கணக்குத் தணிக்கையாளர்களும் வரிவிதிப்பைச் சுலபமாகச் சரிபார்க்கலாம். ஒழுங்கீனம் இருந்தால் திருத்துவது எளிது. ஒரு சதுர மீட்டருக்கு இத்தனை வரி என்ற விகிதத்தை, நகரின் ஜனத்தொகைக்கு ஏற்பவும், வீட்டின் வயதுக்கு ஏற்பவும், வீடு, சொந்தக் குடியிருப்புக்குப் பயன்படுகிறதா அல்லது வாடகைக்கு விடப்பட்டுள்ளதா என்பதற்கு ஏற்பவும், வாடகைக்கு என்றால் குடியிருப்புக்கா, வியாபாரத்துக்கா என்பதற்கு ஏற்பவும், நகரில் வீடு மையமான இடத்தில் அமைந்துள்ளதா, அல்லது புறநகரிலா என்பதற்கு ஏற்பவும் வித்தியாசப்படுத்தி நிர்ணயிக்கலாம். சிலருக்கு வீட்டு வாடகை மட்டுமே ஜீவனோபாயமாக இருப்பதையும் மறந்துவிடக் கூடாது.

சொத்து வரி உயர்வால் வாடகை உயராது என்று அரசு உறுதி கூறுவது பேச்சளவில்தான் நிற்கும். அளவுக்கு மீறிய சொத்து வரி விதிப்பு, வீட்டு கட்டுமானப் பணிகளைக் குறைத்து, குடியிருப்புப் பற்றாக்குறையை உருவாக்கி, வாடகை மேன்மேலும் உயரவே வழிவகுக்கும். எளியோர்தான் அவதிப்படுவார்கள்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.




மூன்றாம் மாடியில் கொலை

# போலீஸைத்

**சென்னை தி. நகரிலுள்ள மாணவர்களுக்கான லாட்ஜ் ஒன்றில் கடந்த நவம்பர் 22 ஆம் தேதி அதிகாலை சுமார் மூன்று மணிக்கு ரமேஷ் சௌத்ரி என்னும் இளைஞர் கொடூரமாய்க் கொலை செய்யப்பட்டார். ஒரு துப்பும் கிடைக்காமல் போலீஸ் திணறுகிறது.**

**அந்தப் பரபரப்பான விஷயம் குறித்து விசாரித்து எழுதுகிறார் நமது நிருபர்......**

நடந்த சம்பவம் இதுதான்.

சென்ற நவம்பர் மாதம் 22ம் தேதி ஞாயிற்றுக் கிழமை அதிகாலை; சுமார் மூன்று மணி இருக்கும். தூங்கிக் கொண்டிருந்த ரமேஷ் சௌத்ரியின் அறைக் கதவை யாரோ தட்டியிருக்கிறார்கள். ரமேஷ், கதவைத் திறந்ததும், அவரை வெளியே இழுத்து, வெட்டுக் கத்தியால் அவர் கழுத்தை வெட்டியிருக்கிறார்கள். கொலையாளி தப்பிவிட, ரத்த வெள்ளத்தின் நடுவே இறந்து கிடந்தார் ரமேஷ். — இது பத்திரிகைகளில் வந்த செய்தி.

சம்பவம் நடந்த இடத்திற்குச் சென்றோம்.

பாண்டி பஜார் பகுதியிலிருக்கும் ராஜா தெருவில் உள்ளது, பூங்கா கல்யாண மண்டபம். தரைத் தளத்தில் டைனிங் ஹால். முதல் மாடியில் கல்யாண மண்டபம். அதற்கு மேலே இரண்டாம், மூன்றாம், நாலாம் மாடிகளில் சுமார் நூறு அறைகள். அவற்றில் பல்வேறு மாநிலங்களைச் சேர்ந்த ஹாஸ்டல் வசதியில்லாத, ஏ.எம்.ஐ.ஈ. போன்ற தொழிற்கல்வி படிக்கும் மாணவர்கள் அறைக்கு இருவர் வீதம் தங்கிப் படிக்கிறார்கள். மூன்றாம் மாடியில் தங்கிப் படித்த இளைஞர்தான் கொலையுண்ட ரமேஷ் சௌத்ரி. அவருடன் அறையில் தங்கியுள்ள இன்னொருவர் ஸ்ரீனிவாசலு. இரண்டு பேருமே ஆந்திராக்காரர்கள்.

மூன்றாம் மாடிக்குள் நுழையும் போதே எதிர்த்தாற்போல ஒரு நடை. அதிலிருந்து படிகட்டுக்குச் சமீபமாய் ஒன்றும், இன்னும் கொஞ்சம் தள்ளி ஒன்றுமாய் இரண்டு சிறு காரிடார்கள் பிரிகின்றன. முதல் காரிடாரின் இரண்டு புறங்களிலும் அறைகள். அடுத்ததில் ஒரு புறம் நான்கு அறைகள். அதை எதிர்த்த மறுபுறம் ஓர் அறை. இரண்டு பாத்ரூம்கள். அதை அடுத்து டாய்லெட்கள்.

காரிடார்கள் அகலம் குறைவானவை. கொலை செய்யப்பட்ட ரமேஷ், அந்தக் காரிடாரில்தான் ரத்த வெள்ளத்தில் கிடந்திருக்கிறார்.

போலீஸ் விசாரணையின் போது, கழுத்தில் வெட்டப்பட்ட ரமேஷ், எதிர்த்த ரூம்களின் கதவுகளைத் தட்டிய போது தூக்கக் கலக்கத்தில் கதவைத் திறந்து பார்த்த அவர்கள், முதலில் ரமேஷ் வெட்டப்பட்டதை அனுமானிக்காமல் ரத்த வாந்தி எடுப்பதாகவே நினைத்திருக்கிறார்கள் என்பதும் அவர் கீழே விழுந்து இறந்த பிறகுதான் கழுத்தின் வலது புறத்தில் ஆழமாய் வெட்டப்பட்டிருப்பது தெரிந்து போலீஸுக்குத் தகவல் தெரிவித்திருக்கிறார்கள் என்பதும் தெரிய வந்திருக்கிறது.

ரமேஷை வெட்டுவதற்குப் பயன்படுத்தப் பட்ட கத்தியைக் கொலையாளி பயன்படுத்திய பின், அதிலிருந்த ரத்தத்தை மிகவும் சுத்தமாய்த் துடைத்து விட்டு டாய்லெட்டின் ஆஸ்பெஸ்டாஸ் கூரை மீதே விட்டுவிட்டுப் போயிருக்கிறான். அதிலும் கைரேகைகள் ஏதும் கண்டுபிடிக்கப்பட்டதாய்த் தெரியவில்லை. கொலையாளி தண்ணீரைக் கொண்டு கை, கால்களைச் சுத்தப்படுத்திக் கொண்டு சென்றதாலோ என்னவோ போலீஸ் நாயைக் கொண்டும் துப்புத்துலக்க முடியவில்லை. ரத்தத்தைத் துடைத்து விட்டு, கத்தியைக் கொலையாளி விட்டுச் சென்றுள்ள விஷயம் போலீஸுக்குச் சவால் விட்டது போல உள்ளது.

பையனின் அப்பா, வி.கே. ராவ், ஆந்திராவிலுள்ள டிரான்ஸ்போர்ட் கம்பெனி ஒன்றில் டெப்போ மானேஜர். அவரது ஒரே பையனை ரமேஷின் கொலை, அவரை உலுக்கி விட்டது.

"என் பையன் ரொம்பச் சாது; யாரிடமும் கல கலவென்று பேச மாட்டான்; தான் உண்டு; தன் வேலை உண்டு என்று இருப்பான். ஒரு கெட்ட பழக்கமும் கிடையாது. அவனைப் போய் இத்தனை கொடூரமாய்க்

# திணறடிக்கும் கொலை கேஸ்!

கொன்று விட்டார்களே பாவிகள்...'' என்று நெஞ்சில் துக்கம் அடைக்கப் பேசுகிறார் ராவ்.

''நான், இன்னும் சில நாளில் எங்கள் உறவுக்காரர் ஒருவர் திருமணத்துக்காகச் சென்னைக்கு வந்து, இவனையும் அழைத்துக் கொண்டு போகலாம் என்று திட்டமிட்டிருந்தேன். ஆனால் சென்னைக்கு இப்படி ஒரு சம்பவத்துக்காக வர வேண்டியதாகி விட்டதே! அவனுக்கு எதிரிகள் யாரும் இருப்பார்கள் என எனக்குத் தோன்றவில்லை. யார் தான் கொன்றார்களோ!'' — கண்கள் கலங்கின அவருக்கு.

அப்பா இப்படிச் சொன்னாலும் போலீஸ் விசாரணையில் பையனைப் பற்றிச் சில சந்தேகத்துக்குரிய தகவல்கள் தெரிய வந்துள்ளன. பையன் மரைன் இஞ்ஜினிரிங் படித்து விட்டு, முதலில் பரீட்சை எழுதிப் பெயிலாகி விட்டான். ஆனால் சென்னையிலேயே தங்கியிருந்திருக்கிறான். இடையில் 'ஜான்டிஸ்' என்று ஒண்ணரை மாதம் ஊரில் இருந்து விட்டுக் கடந்த செப்டம்பரில் மறுபடியும் சென்னைக்கு வந்து பரீட்சை எழுதியிருக்கிறான். பரீட்சையை முடித்து விட்டு ஊருக்குப் போகவில்லை. சென்னையிலேயே கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதாக அப்பாவுக்கு எழுத, அவரும் சம்மதித்திருக்கிறார்.



'தினமும் ரமேஷ் சௌத்ரி காலை எட்டு மணிக்கு வெளியில் போனால் இரவுதான் ரூமுக்குத் திரும்புவார். பல நாட்கள், இரவு திரும்பும் போது பல விதமான அயல்நாட்டுச் சரக்குகளைக் கொண்டு வருவார். அவற்றை இரவில் ரூமில் வைத்துக் கொண்டிருந்து விட்டு, மறுநாள் காலை மறுபடியும் கொண்டு போய் விடுவார்...' என்று சொல்லப்படுவதால் ரமேஷுக்கும், கடத்தல்காரர்களுக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமா என்று போலீஸுக்குச் சந்தேகம். மேலும், ரமேஷ் கழுத்தில் போட்டிருந்த தங்கச் சங்கிலிக்காக மட்டுமா இந்தக் கொலை நிகழ்ந்திருக்க முடியும் என்பதும் நெருடுகிறது.

இது தவிர, ரமேஷின் மாதாந்திரச் செலவுக்காகச் சுமார் ரூ.600 முதல் ரூ.800 வரை ஊரிலிருந்து அனுப்புவாராம் அவனது அப்பா. ரமேஷோ, தி.நகரில் மட்டும் ஐந்து வெவ்வேறு பாங்குகளில் அக்கவுண்டுகள் வைத்திருக்கிறார். எல்லாமே தம் பெயரில். செலவுக்கு அப்பாவிடமிருந்து பணத்தை எதிர் பார்க்கிறவராய் இருந்தால், ரமேஷ் ஐந்து சேமிப்புக் கணக்குகள் வைத்திருக்க வேண்டிய அவசியம்தான் என்ன? — இங்கேயும் ஒரு நெருடல்.

மேலும் அந்த லாட்ஜின் அமைப்பினைச் சற்று கவனமாய்ப் பார்த்தால், பிரதான வாசலைத் தவிர, உள்ளே நுழைய வேறு வழியில்லை. (ரூம்களில் கூட ஜன்னல்கள் கிடையாது) அங்கே ஒரு வாட்ச் மேன் உண்டு. அந்த வாட்ச்மேன் என்னதான் தூங்கு மூஞ்சி என்று அங்குள்ளவர்கள் சொன்னாலும் கூட, லாட்ஜின் அமைப்பு, கொலை நடந்திருக்கும் விதம், கத்தியை அங்கேயே விட்டுச் சென்றிருப்பது போன்ற விஷயங்களைப் பார்க்கும் போது, நிச்சயமாய் லாட்ஜ் வாசி ஒருவரே இதில் சம்பந்தப்பட்டிருப்பார் என்பது போலீஸின் சந்தேகம்.

பல முனைகளிலும் — பல தரப்பட்டவர்களையும் போலீஸ் தீவிரமாக விசாரித்துக் கொண்டிருக்கும் நிலையிலும் இன்னும் குற்றவாளியைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்பது வியப்பாய் உள்ளது.

இதற்கு என்ன காரணம்?

''லாட்ஜில் உள்ள பலரும் மாணவர்கள் என்பதால், அவ்வளவாக ஒருவர் விஷயத்தில் இன்னொருவர் தலையிட்டுக் கொள்வதில்லை. இதனால் ரமேஷின் நடவடிக்கைகள் பற்றிச் சரியான தகவல்கள் எங்களுக்குக் கிடைக்கவில்லை. அவர் ரூமில் கிடைத்த டைரி கூட பிரயோஜனமாயில்லை. இருப்பினும், இது பல நாள் திட்டமிட்டுச் செய்யப்பட்ட கொலை என்பதில் சந்தேகமேயில்லை. இன்னும் சில நாட்களில் எப்படியும் குற்றவாளி பிடிபட்டு விடுவான்; தப்பிக்க முடியாது'' என்றார் மாம்பலம் போலீஸ் ஸ்டேஷனின் இன்ஸ்பெக்டர் வடிவேலு.

— நமது நிருபர்

புற்றுநோய்க்கு ஆயுர்வேத முறைப்படி டாக்டர் பாபு ராவினால் சிகிச்சை அளிக்கப்படுகிறது.

1 — 1 — 271/3, சிக்கட்பள்ளி, ஹைதராபாத் — 500 020.

## ஆச்சரியம்! ஆனால் உண்மை!

ஸ்ரீமதி சீதாலட்சுமி கோபாலுக்கு 32 வயது ஆகிறது. இவர் கர்ப்பப்பை புற்றுநோயால் அவதிப்படுகிறார். அவரே சொல்கிறார்: "நான் மூன்று தடவை சஸ்திர சிகிச்சை மற்றும் கெமோ தெரபி, மேலும் ரேடியேஷன் சிகிச்சைகள் செய்து கொண்டும் எந்தவித முன்னேற்றமும் ஏற்படவில்லை. நம்பிக்கை இழந்து தவித்த பொழுது ஹைதராபாத் ஆயுர்வேத டாக்டர் பாபு ராவைப் பற்றிய விளம்பரம் ஒன்றை ஒரு தமிழ்ப் பத்திரிகையில் படித்தேன். நான் ஐந்து மாதங்கள் தொடர்ந்து அவரது மருந்துகளைச் சாப்பிட்டதினால் நான் குணமடைந்ததை எனது குடும்ப டாக்டர் மூலமாக அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன்.

நான் இந்த விளம்பரத்தை வெளியிடக் காரணம் மற்ற நோயாளிகளும் இந்த டாக்டரை அணுகி குணம் பெறலாம் என்ற நோக்கத்துடன் தான்.

விலாசம்: சீதாலட்சுமி கோபால் B.Sc.,
NC — 1, சாண்டஸ் காலனி,
கோல்ஹாட்,
தானா — 400 607.
மஹாராஷ்ட்ரா.

| விலாசம் | போன் நெம் | பார்க்கும் நாட்கள் |
|---|---|---|
| டாக்டர் எம். பாபுராவ்<br>கேன்ஸர் இன்பர்மரி<br>1-1-271/3, சிக்கட்பள்ளி,<br>ஹைதராபாத் — 500 020. | 64735 | பிரதி வியாழன்<br>பிரதி வெள்ளி |
| C/o. ஹோட்டல் சுதாரா<br>உஸ்மான் ரோடு,<br>தி. நகர்,<br>சென்னை — 600 017. | 445164 | பிரதி சனி |
| C/o. ஹோட்டல் பிருந்தாவன்<br>எம். ஜி. ரோடு,<br>பெங்களூர். | 573271 | பிரதி ஞாயிறு |
| C/o. ஹோட்டல் மீட்-டவுன்<br>மேற்கு அந்தேரி ரயிலடி எதிரில்,<br>பம்பாய். | 628882 | பிரதி புதன் |

# காப்பியடித்தால்

# ஓராண்டு ஜெயில்

**ப்ளஸ் டு பொதுத் தேர்வெழுதும் மாணவர்கள் காப்பியடித்தால் ஓர் ஆண்டுச் சிறைத் தண்டனையளிப்பதற்கு வகை செய்யும் அவசரச் சட்டம் ஒன்றைக் கொண்டுவரத் தமிழக அரசு திட்டமிட்டுள்ளது. அது குறித்து இவர்கள் கூறுகிறார்கள்......**



**சத்தீஷ் (குருநானக் கல்லூரி மாணவர்):**

ப்ளஸ் டுவானாலும் சரி, கல்லூரிகளானாலும் சரி, பரீட்சையின் போது காப்பியடிப்பதென்பது இன்றைக்குச் சகஜமாகிவிட்டது. அதுவும் 'மாஸ் காப்பியிங்' என்பது தண்ணீர் பட்ட பாடு. அதனால்தான் ஒழுங்காய்ப் படித்துப் பாஸ் செய்பவர்களுக்கும் மதிப்பில்லாமல் போய்விட்டது. சமீபத்தில் மாஸ் காப்பியடித்ததால் ஒரு பள்ளியில் பரீட்சை எழுதிய அத்தனை மாணவர்களையும் ஃபெயில் ஆக்கி விட்டார்கள் என்று ஒரு செய்தி படித்தேன். ஒரு தேர்வு மையத்தில் இரண்டொருவர் கூடவா காப்பியடிக்காமல் பரீட்சை எழுதியிருக்க மாட்டார்கள்? அவர்களையுமல்லவா இந்த நடவடிக்கை பாதித்து விட்டது!

எனவே, காப்பியடிப்பதைத் தடை செய்யும் சட்டம் கொண்டு வருவது நியாயமானதுதான். இந்தத் தண்டனை பயமே காப்பியடிப்பதை வெகுவாகக் குறைத்து விடும். ஒழுங்காகப் படித்துப் பாஸ் செய்ய விரும்பும் ஒவ்வொரு மாணவரும் இந்தச் சட்டத்தை மனப்பூர்வமாக வரவேற்கவே செய்வார்.

**எஸ். ராதாகிருஷ்ணன் (வழக்கறிஞர்):**

ப்ளஸ் டு மாணவர்கள் காப்பியடித்தால் ஓராண்டு சிறைத் தண்டனை அளிக்கவும் பத்தாண்டு காலத்திற்குத் தேர்வெழுதுவதைத் தடை செய்யவும் அரசாங்கம் ஓர் அவசரச் சட்டம் கொண்டு வருகிறதாம். பொதுவாகவே மாணவப் பருவம் என்பது எதையும் சீரியஸாக எடுத்துக் கொள்ளாத பருவம் என்பதால் தண்டனையின் சீரியஸ்னஸும் அவர்களுக்குப் புரியாது. அதுவுமில்லாமல் பத்து ரூபாய் திருடியவனுக்கு நூறு ரூபாயா அபராதம் போடுவது?



காப்பியடிக்கும் மாணவர்களுக்குத் தண்டனை தரலாம். ஆனால் அது இத்தனை கடுமையாக இருக்கக் கூடாது. ஒரு மாணவன் ஓராண்டு காலம் சிறையில் இருந்தால் எத்தனை விதமான குற்றவாளிகளுடன் அவன் பழக நேரிடும் என்பதை யோசித்துப் பார்க்க வேண்டும். அந்நிலையில் ஓராண்டு தண்டனை முடிந்து வெளியே வரும்போது அவன் ஒரு நல்ல குடிமகனாக வர முடியுமா? அரசு இந்தத் தண்டனை விஷயத்தில் நன்றாக யோசித்துச் செயல்பட வேண்டும்; அவசரப்பட்டு விடக்கூடாது என்பதே எனது கருத்து.

பேட்டி: **மௌஷ்மி.**

# உங்கள் குடும்ப நலனுக்காக உழைக்கும் உங்களைக் கவனித்துக் கொள்வது யார்?

## புதிய Godrej® 165 லிட்டர்

உங்களை நன்கு கவனித்துக்கொள்ளத் தகுந்தபடி வடிவமைக்கப் பட்டுள்ளது புதிய கோத்ரெஜ் 165 லிட்டர் ரெஃப்ரிஜெரேட்டர். எங்கு தேவையோ, அங்கு இடவசதி கொண்டது—காய்கறி டிரேயிலும், டோர் பேனலிலும்.



**ஏனைய 165 லிட்டர் ரெஃப்ரிஜெரேட்டர் களைவிட விசாலமான காய்கறி டிரே, முட்டை ரேக்.**

கோத்ரெஜ் காய்கறி டிரேயில் அதிகம் காய்கறிகள் வைக்கலாம்; நீண்ட காலம் பசுமையாகவும் இருக்கும்.

டோர் பேனலில் 15 முட்டைகள் வரை வைக்கலாம். வேறெந்த ரெஃப்ரிஜரேட்டரையும் விட இது அதிகம். உங்கள் குடும்பத் தேவை களுக்கு ஈடு கொடுக்கிறது புதிய கோத்ரெஜ்.



**10 பெரிய பாட்டில்கள் வைக்கக் கூடிய ஒரே 165 லிட்டர் ரெஃப்ரிஜெரேட்டர்**

திரும்பத் திரும்ப பாட்டில்களை நிரப்பும் வேலை இனியில்லை.

**இடவசதியை நன்கு பயன்படுத்த, தேவைப்படி மாற்றி அமைக்கக்கூடிய ஷெல்ஃபுகள்**

ஷெல்ஃபுகளை ஏற்றி, இறக்கி அமைக்கலாம். இதனால், பெரிய அல்லது பலவித வடிவமுள்ள பாத்திரங்களை வைக்கலாம்.



**புதிய தொழில்நுட்பத்தின் உதவியால் விரைவில் குளிர்விக்கும். மின் செலவு சேமிக்கும்.**

புதிய, கட்டுறுதியான, மின்சக்தி சேமிக்கும் கம்ப்ரெஸர்; அத்துடன் சர்வதேச தரமேன்மையுள்ள பாலியூரெத்தேன் இன்சுலேஷன் இவை காரணமாக, ரெஃப்ரிஜெரேட்டர் விரைவில் குளிரும்.

நவீன தொழில்நுட்பம் மின்சக்திச் செலவைக் குறைத்து, மின்கட்டணம் சேமிக்க உதவுகிறது.

**மேன்மையான ஃபினிஷ்...எல்லாவற்றுக்கும் மேலாக!**

எபோக்ஸி பவுடர் வேய்ந்த ஃபினிஷ் மூலம் கவர்ச்சி யான, கீறலே விழாத, நீடித்து நிலைக்கும் வெளிப்புறம்.

ஒன்று செய்யுங்கள்...கடைக்குச் சென்று ஒரு புதிய கோத்ரெஜ் வாங்குங்கள். அது உமது குடும்பத்தை நன்கு கவனித்துக் கொள்ளும்.

# ரெஃப்ரிஜெரேட்டர்.



**Godrej®**

புதிய ரெஃப்ரிஜெரேட்டர்—உழைக்கும் ஒவ்வொரு
இல்லத்தரசிக்கும் இன்றியமையாதது.

HTA-1640

# வேரில்லாத மரங்கள்

## 9

காப்பி குடிக்கவென தம்ளரைக் கையில் எடுத்து வாய்க்கருகில் கொண்டு சென்ற போது, 'அந்த வாடை' துல்லியமாய் நாசியில் ஏறி, க்ஷண காலத்தில் வயிற்றைப் புரட்டியது.

நாலு நாட்களாய்க் காப்பி, டீ, தண்ணீர் என்று எதைக் குடிக்க முனைந்தாலும் கூடவே இந்தக் 'கவிச்ச வாடை' எழுந்து, குடலை முடிச்சுப் போட வைக்கிறது.

வாடை ஏறிவிட்ட ஒரே தம்ளரே திரும்பத் திரும்ப வந்து சேருகிறதா, இல்லை வீட்டில் இருக்கும் நாலு தம்ளர்களிலுமே ஆக்கிரமிப்பு இருக்கிறதா?

கையிலிருந்த தம்ளரைப் புரட்டிப் பார்த்த வரையில் எதுவுமே புரியாமல் போக, லேசான எரிச்சலுடன் மாதவன் அதைக் கீழே வைத்தான்.

கவிச்ச வாடை...

பச்சை முட்டைக்கே உரித்தான அலாதியான நாற்றம்...

சின்ன வயசில் ஆயா வீட்டில் வளர்ந்த போது, உடம்பு ரொம்பச் சோனியாக இருக்கிறது, இப்படியே விட்டால் பேரப் பிள்ளை நாளைக்குச் சரியான நோஞ்சானாகத்தான் இருப்பான் — என்று போவோர், வருவோர் கூற, சம்பிரதாயத்தை, ஆசார அனுஷ்டானங்களை ஒதுக்கி வைத்துவிட்டு, இவன் நித்தம் முட்டை சாப்பிட ஆயா ஏற்பாடு செய்த நாளில்தான் இந்த வாடை அவனுக்கு முதன் முதலில் பரிச்சயம் ஆனது.

'முட்டை' என்று கூட வாயால் ஆயா சொல்ல மாட்டாள். பண்ணை ஆளை அழைத்துப் 'பேர் சொல்லாதத வாங்கிட்டு வந்தியாடா, கண்ணாயிரம்?' என்று கேட்டு, அவன் அதை உடைத்து, லோட்டாவில் ஊற்றி, ஸ்பூனால் அடித்துப் பால், சர்க்கரை போட்டுக் கலந்து, பேரப்பிள்ளையிடம் கொடுக்கும் வரை, தலைப்பால் மூக்கைப் பொத்திக் கொண்டாவது கூடவே நிற்பாள்!

'நாறுது ஆயா' என்று முகத்தைச் சுருக்கி இவன் நாள் தப்பாமல் மறுக்க, 'என் தங்கமில்ல, என் ராசா இல்ல... 'லபக்'குன்னு குடிச்சிடு கண்ணு... இப்ப சமர்த்தா குடிச்சேன்னா, சாயங்காலம் அதிரசம் சுட்டுத் தருவேன், கடலை மிட்டாய் வாங்கக் காசு தருவேன்...' என்று ஆயாவும் விடேன் தொடேன் என்று ஆசை காட்டுவாள்.

மூக்கை ஒரு கையால் அழுந்தப் பிடித்துக் கொண்டு கண்ணாயிரத்தின் உதவியோடு மளமளவென்று லோட்டாவில் இருக்கும் பால் கலந்த முட்டையை வாயில் ஊற்றினதும், வழவழா என்கிற அந்தப் பானத்தை விழுங்கின கையோடு வயிற்றில் சங்கடத்தை உற்பத்தி பண்ணியதில், வாந்தியாக வெளியே வந்து விழுந்ததுதான் பாதி நாட்கள் நடந்திருக்கிறது...

ஒரு மாதம் போல இப்படி மன்றாடிவிட்டு, சரி போ... முட்டை சாப்பிடாவிட்டால் போகிறான் — பாலும், தயிரும், வெண்ணெயும் கொடுத்துப் பேரனைத் தேற்றிவிடலாம் என்று தீர்மானித்து, ஆயா பேர் சொல்லாததை வாங்குவதை நிறுத்தினாளோ, இவன் பிழைத்தானோ!

சின்ன வயசில் வேண்டா வெறுப்பாக, செய்யக் கூடாத பாவத்தைச் செய்கிற அவஸ்தையுடன் அதைச் செய்துவிட்டதில் இன்றைக்கும் 'அசைவம்' என்றாலே உடம்பும், மனசும் அருவருப்பில் உதறித்தான் போகின்றன.

பச்சை முட்டை வாடை...

அலாதியாய் எழும் கவிச்ச வாடை...

ஒரு தரம் கண்ணாயிரம் கை தவறிக் கிணற்றடியில் பேர் சொல்லாததைப் போட்டு உடைத்துவிட்டு, உடனே அதை நன்றாகக் கழுவிவிட மறந்துவிட்டதில், நாலு நாட்களுக்கு அந்தப் பக்கம் போனாலேயே என்னமாய் நாற்றம் ஆளை விரட்டியது!

ஆட்டுக்கறி விற்கும் கடையைத் தாண்டிப் போனாலும்கூட அந்த அளவுக்குக் கவிச்ச வாடை வீசி மாதவன் உணர்ந்ததில்லைதான்...

இரண்டு நாட்கள் முட்டை அடிக்க உபயோகிப்பதற்குள் லோட்டாவில் அந்த நாற்றம் ஏறிவிட, 'டே, கண்ணாயிரம் லோட்டால வாடை வருதாமேடா... தம்பி சொல்லுதே— வெண்ணி ஊத்திக் கழுவி அதைத் தனியா வச்சுடுடா... மறந்து போய்க்கூட வீட்டுப் பாத்திரங்களோட துலக்கப் போட்டுடாதடா...' என்று கவனமாய் ஆயா அந்த லோட்டாவைத் தனிமைப்படுத்தியது இப்

சிவசங்கரி

போது நினைவுக்கு வர, மாதவன் கீழே வைத்த தம்ளரை மறுபடியும் கையில் எடுத்து, மூக்கருகே கொண்டு சென்றான்.

யக்...

தப்பாமல் அதே துர்மணம்தான்...

நிச்சயம் இது முட்டை வாடைதான்...

தம்ளரைத் தழைத்தவன் மடியில் இருந்த பேப்பரைக் கீழே போட்டுவிட்டு எழுந்து, சமையல் கட்டுக்குள் சென்றான்.

வசந்தா பூண்டு உரிப்பதில் கவனமாய் இருந்தாள்.

ஒரு பக்கமாய், பொடியாய் நறுக்கி வைக்கப்பட்ட வெங்காயம்...

அதை நறுக்கும்போது கண்களில் நீர் பெருகியதற்குச் சாட்சியாய் வசந்தாவின் கண்களும், மூக்குத் நுனியும் சிவந்திருந்தன.

இவனைக் கண்டதும், மூக்கை உறிஞ்சிக் கொண்டு அவள் புன்னகை செய்தாள்.

''என்ன காப்பி சாப்பிட்டீங்களா? நேத்து கூட 'ஹோட்டல் காப்பியாட்டம், என்ன நெஸ்கஃபே'ன்னு நீங்க சலிச்சுக்கிட்டதால, சாயங்காலம் ஆபீஸ்லேர்ந்து வர்றப்போ கால் கிலோ காப்பிப் பொடி அரைச்சு வாங்கிக்கிட்டு வந்து, மாடி வீட்டம்மாகிட்ட ஃபில்டர் கடன் வாங்கி, டிகாக்ஷன் இறக்கிக் காப்பி கலந்திருக்கேன்... எப்படி? நல்லா இருக்கா?''





"என்னைச் சிக்கனமா இருக்கச் சொல்லிட்டு நீ மட்டும் மாசா மாசம் புடைவைக்காகச் செலவு பண்றியே?"

"ரெண்டு பேரும் செலவு பண்ணினா கட்டுப்படி ஆகாதே! அதனால்தான்!"

— தி. ராஜாராம்.

தனக்காக இத்தனை பாடுபட்ட சந்தோஷத்தோடு பேசுபவளிடம் குற்றப் பத்திரிகை வாசிக்கப் பிடிக்காமல் மாதவன் சில கணங்களுக்குத் தயங்கினான். அப்புறம் மெள்ள தம்ளரை அவளிடம் நீட்டினான்.

"இதைக் கொஞ்சம் சாப்பிட்டுப் பாரு வசு..."

"ஏன்? இதுல அப்படி என்ன ஸ்பெஷலா இருக்கு? நீங்க குடிங்க. நான் சாப்டாச்சு..."

"பரவாயில்லே... இந்தத் தம்ளர்லேர்ந்து கொஞ்சம்..."

"பூண்டு கையா இருக்கே?"

அவன் நீட்டியதைக் கையில் வாங்காமல் வசந்தா அப்படியே வாயைத் திறக்க, மாதவன் ஒரு வாய் காப்பியை ஊற்றினான்.

வசந்தா முகத்தைச் சுளித்தாள்.

"ஆறிடுச்சே... இத்தனை கஷ்டப்பட்டு நல்லாக் காப்பி போட்டுத் தந்தா, ஏன் ஆற விட்டுட்டீங்க...?"

அவளுக்குப் பதில் சொல்லாமல் மாதவன் எதிர்க்கேள்வி கேட்டான்.

"ஏதாவது வாடை வருதா வசு?"

"வாசனையா? காப்பி வாசனைதான் ஜம்முன்னு வருது... ஏன் கேக்கறீங்க?"

"இல்லே... வந்து..."

வசந்தா பூண்டு உரிப்பதை நிறுத்திவிட்டு அவனை ஏறிட்டாள்.

எதற்காக இத்தனை தயக்கம் என்று அந்தப் பார்வை கேட்டது.

மாதவன் அவள் அருகில் உட்கார்ந்து கொண்டான். மடியில் விழுந்திருந்த பூண்டுத் தோலைத் தட்டிவிட்டான். சின்னக் குரலில் கேட்டான்:

"நீ... நீ... வந்து... முட்டை சாப்பிடறியா என்ன?"

உடனே பதில் கூறாமல் வசந்தா அவனை வெறித்தாள். சற்று மௌனித்துப் பேசிய போது, கோபம் அந்தக் குரலில் நன்றாகவே மண்டியிருந்தது.

"வீட்டுல அசைவம் சமைக்க வேணாம்னு கேட்டுக்கிட்டீங்க... நான் சரின்னு ஒத்துக்கிட்டேன்... மாசம் மூணாகப் போவுது; நாக்கு துப்புரவாச் செத்தாலும்... இன்னும் ஒரு தரம் கூட உங்களுக்குக் கொடுத்த வார்த்தையை நான் மீறல... காலை வேளைல இட்லியும் தோசையும் பிடிக்க மாட்டேங்குது... சரி, பச்சை முட்டையைப் பால்ல கலந்து சாப்பிட்டா உடம்புக்குத் தெம்பு, பசியும் ஆறும்னு ஒரு வாரமாச் சாப்பிடறேன்... அது கூட தப்பா? சமைக்கக் கூடாதுன்னிட்டுத்தான் கேட்டுக்கிட்டீங்களே, தவிரவும் பச்சையா முட்டை கூடச் சாப்பிடக் கூடாதுன்னிட்டு கண்டிஷன் போடலியே!"

மாதவன் அவசரமாய்க் குனிந்து அவள் கையைப் பற்றிக் கொண்டான்.

"எதுக்காக இப்படிப் படபடக்கறே வசு? நான் இப்ப என்ன சொல்லிட்டேன்? ம்? முட்டை சாப்பிடறியான்னு சாதாரணமாத் தானே கேட்டேன்?"

கோபத்தை வெளிப்படுத்தும் உத்தேசத்தோடு எதுவும் பேசாமல் வசந்தா தலையைக் குனிந்து பூண்டு உரிக்க முற்பட, மாதவன் தழைந்த குரலில் பேசினான்.

"காப்பி,தண்ணிகுடிக்கறப்போ,நாலைஞ்சு நாளாகவே தம்ளர்லே ஒரு கவிச்ச வாடை வருது... அதான் கேட்டேன்."

வசந்தா 'சக்'கென்று தலையை நிமிர்த்தினாள்.

"காப்பித் தம்ளர்ல வருதா? எங்கே?"

கையை நீட்டி அவனிடமிருந்த தம்ளரை வாங்கியவள், மூச்சை நீளமாய் இழுத்து வாசனை பார்த்துவிட்டு, உதட்டைப் பிதுக்கினாள்.

"எனக்கொண்ணும் வரலியே?"

"அப்ப, நான் சும்மா சொல்றேன்னு நினைக்கறியா?"

"அப்ப, நான் வேணும்னு மறுக்கறேன்னு சொல்றீங்களா?"

மாதவன் எழுந்து நின்றான்.

"விதண்டாவாதம் பண்ணினா, எதையும் சரியாப் பேச முடியாது வசு... நான் என்ன சொல்ல வரேன்...னா..."

அவனை முடிக்க விடாமல் வசந்தா குறுக்கிட்டாள்.

"புதுசா என்ன சொல்லப் போறீங்க? முட்டை சாப்பிடாதே, எனக்குப் பிடிக்கலைன்னு... அதானே... அசைவம் சமைக்கக் கூடாதுன்னு சொன்னீங்க, சரி. இந்தச் சின்ன விஷயத்துல என் விருப்பப்படி நடந்துக்கக் கூடவா எனக்கு உரிமை இல்லே? எனக்குப் பூண்டு பிடிக்காது... ஆனாலும் உங்களுக்காகத் தினமும் சமையல்ல அதைச் சேர்த்துக்கலியா?"

"அட, நான் இப்ப என்ன சொல்லிட்டேன்னு நீ இந்தக் குதி குதிக்கறே?"

"குதிக்கறேனா? நானா? அதுசரி, நீங்க உங்க இஷ்டத்துக்கு என்ன வேணாலும் குத்தம் சாட்டுவீங்க, ஆனா நான் வாயைத் திறந்து பதிலுக்கு 'இது நியாயமாங்க'ன்னு கேக்கக் கூடாது — அப்படித்தானே? இது என்ன வீடா? இல்லே ஜெயிலா? சொல்லிடுங்க..."

உதடுகள் துடிக்க, கண்கள் கலங்கப் பேசியவள், கையை உயர்த்தி ரவிக்கையால் கண்களைத் துடைத்துக் கொள்ள, மாதவன் மனசாகாமல் அவள் அருகில் உட்

# Boost is the secret of my energy!

"பதினைந்து அல்லது இருபது ஓவர்கள் பந்து வீச்சு அல்லது செமத்தியாக அடிக்கும் பேட்டிங், களத்தில் எப்போதும் ஓட்ட சாட்டம், எமது உத்திகளைக் கையாளுதல். இப்படித்தான் என்னுடைய கிரிக்கெட்டை நான் ரசித்து விரும்புகிறேன்.

இதற்கு உடல் தகுதியான நிலையில் இருப்பதும், ஏராளமான சக்தியும் தேவை. அதனால்தான் நான் ஆண்டு முழுவதும் கடினமாகப் பயிற்சி செய்கிறேன். அதனால்தான் நான் பூஸ்ட் குடிக்கிறேன் நாள் தோறும்."



கபில்தேவ் பூஸ்ட் பருகுவதற்குக் காரணம், அது அவருக்குத் தேவையான சக்தியையும் அவர் விரும்பும் சுவையையும் அளிக்கிறது. பூஸ்டில் கிரீம் நிறைந்த பால் மற்றும் ஆரோக்கியமான மால்ட்டின் குண நலன்களுடன் கோகோவும் கலந்துள்ளது.

கபிலைக் கேளுங்கள். அது அவரது ரகசியம்.




# பூஸ்ட்

## இன்சுவைமிக்க சக்தி

HTA 5079 TAM

கார்ந்து, தோளை அணைத்துக் கொண்டான்.

"அசடு... இப்ப எதுக்குக் கண் கலங்கறே ம்? முட்டை சாப்பிடணுமா, தாராளமாச் சாப்பிடேன், யார் தடுக்கிறாங்க? பச்சையா என்ன, ஆம்லட் பாயில்ட்னு சமைச்சுச் சாப்பிட்டாக் கூட... நான் வேணாம்னு சொல்லப் போறேன்? முட்டை அசைவத்தோட சேர்த்தியா? இல்லையே... இப்ப ஹோட்டலுக்குப் போனா கேக்ல, ஐஸ்க்ரீம்ல முட்டை சேக்கறாங்கதான் — எனக்குத் தெரியாதா என்ன? வாடை முகத்துல அறைஞ்சாத்தான் பிடிக்கலைன்னு சொல்றேன்... வேணும்னா ரெண்டு கண்ணாடி தம்ளர், தோசைக் கல்லு தேவையானதை வாங்கித் தனியா உன் உபயோகத்துக்குன்னு வெச்சிட்டாப் போவுது. எல்லாத்துலேயும் ஒண்ணடி மண்ணடியாய்க் கலந்திட வேணாம்னு சொல்ல வந்தா... என்ன வசு இது... பச்சைக் குழந்தையாட்டம், கண் கலங்கி... இந்த மாதிரி சின்ன விஷயத்தை நீ பெரிசு பண்ணறது எனக்கு வருத்தமா இருக்கு... சிறைல வைக்கற மாதிரியா உன்னை நடத்திட்டு இருக்கேன்... என் தேவதையைத் தங்கத் தாம்பாளத்துல தாங்கி உசத்தியா வெச்சிக்கணும்ங்கற என் ஆசை புரியாம என்ன வசு நீ..."

கொஞ்சலாய்ப் பேசி, நெற்றியில் பறந்த முடியை விலக்கிக் கண்ணீர் ததும்பிய விழிகளில் மாதவன் முத்தமிட, அந்த அரவணைப்புக்காகக் காத்திருந்த தினுசில் வசந்தா பெரிசாய் விசும்ப முற்பட்டாள்.

"ஷ்... ஷ்... வசு... எதுக்கும்மா அழறே?"

மாதவன் பதற, அழுகையூடே வசந்தா பேசினாள்.

"ரெண்டு நாளாவே மனசு சரியாவே இல்லே மாது... முந்தாநாள் எங்க சொந்தக்காரர் ஒருத்தரை பஸ் ஸ்டாப்லே பார்த்தேன். நான் வீட்டை எதிர்த்துக்கிட்டு வந்ததுல அத்தம்மா ரொம்ப அப்செட் ஆயிட்டாங்களாம்; அண்ணன் வீட்டுல இருக்கறப்போ மூச்சு விடாம... இருந்திட்டு தனியா இருக்கிறப்போ 'வசு, வசந்தா'ன்னு என் பேரைச் சொல்லிப் புலம்பிக்கிட்டே இருக்காங்களாம். 'பரிமளம் பாதி உடம்பாயிட்டா — பெத்த பாசத்தை விட வளர்த்த பாசம் பெரிசில்லையா'ன்னு சொந்தக்காரங்க சொன்னப்போ ரொம்ப வருத்தமாயிருந்திச்சு... என்னால எத்தனை பேருக்கு என்னென்ன மனக்கஷ்டம்னு... சரி, எதையும் உங்ககிட்ட காட்ட வேணாம், பாவம் நீங்களும் பெத்தவங்களை விட்டுப் பிரிஞ்சு நொந்துதானே போயிருக்கீங்கன்னு பேசாம இருந்தேன். உங்களுக்காக நான் அத்தனையும் தாங்கிக்கிட்டு இருந்ததைப் புரிஞ்சிக்காம, 'ஏன் முட்டை சாப்பிடறே'ன்னு நீங்க கேட்டதும், துக்கம் தாள மாட்டாமப் போயிடுச்சு..."

விசும்பல் அழுகையாய் மாற, அவளை என்ன சொல்லித் தேற்றுவது என்று புரியாத அவஸ்தையில் மாதவன் சில நிமிஷங்களுக்குத் தடுமாறினான். பிறகு, அணைப்பை இறுக்கி, முகத்தைத் தன் பக்கமாய்த் திருப்பி, கண்களைத் துடைத்துவிட்டான்.

"இதுக்கெல்லாம் வருத்தப்பட ஆரம்பிச்சோம்னா நாள் பூரா அழுதுக்கிட்டே இருக்க வேண்டியதுதான். தேத்திக்க வசு... யார் எப்படி வீராப்பா இருந்தாலும், உங்க அத்தம்மாவும் எங்கம்மாவுமாவது நம்ப நடத்தையால உடைஞ்சு போயிடுவாங்கன்றது நாம எதிர்பார்த்த விஷயம்தானே... விடு... நாளடைவிலே மனசு மாறி நம்பளை ஏத்துப்பாங்கன்ற நம்பிக்கையோட வாழணுமே தவிர, இப்படி இடிஞ்சு போகக் கூடாது... நான் ஒண்ணு சொல்றேன் கேக்கறியா? ம்?"

"என்ன?"

"பூண்டு, வெங்காயத்தை அப்படியே வெச்சிட்டு எழுந்திரு சொல்றேன்..."

"எழுந்து?"

"சட்டுபுட்டுன்னு குளிச்சுட்டு, ரெண்டு பேரும் தயாராகி, புகாரியில சாப்பிட்டுட்டு, அப்படியே மௌண்ட்ரோட்ல மாட்னி படம் பார்த்துட்டு வரலாம்... ஞாயிற்றுக்கிழமைகூட வீட்டுலேயே அடைஞ்சு கிடந்தா எப்படி? ம்?"

"புகாரியில என்ன சாப்பாடு கிடைக்கும் தெரியுமா?"

"நல்லாவே தெரியும்... நீ சிக்கன் சாப்பிடு, நான் ஆப்பம், வெஜிடபிள் குர்மா சாப்பிடறேன்..."

"நிஜம்மாத்தான் சொல்றீங்களா மாது?"

"நிஜம்மா..."

"பணம் எக்கச்சக்கமா ஆகுமே?"

"அதைப்பத்தி நீ கவலைப்படாதம்மா தங்கம். மாசம் பொறந்து ஒரு வாரம் ஆகல, அதுக்குள்ள என்ன சிக்கனம்? கிளம்பு, கிளம்பு, அந்த வெள்ளை ஜார்ஜெட் புடைவை, ஸ்லீவ்லெஸ் ரவிக்கையைப் போட்டுக்கிட்டு ஜம்முன்னு தேவதை மாதிரி கிளம்பு பார்க்கலாம்..."

கிளம்பினாள்.

திட்டமிட்டபடி புகாரியில் சாப்பிட்டு, சாந்தியில் மாட்னி பார்த்துவிட்டு, அவர்கள் வீடு திரும்பிய போது மாலை மணி ஏழு...

"ராத்திரி சாப்பாட்டுக்குச் சமைக்கணும்" என்றபடி உள்ளே போக இருந்தவளை மடக்கி, "என்ன அவசரம்? — நாள் பூரா தன்னியே இருந்திட்டு இப்பவும் சமையல் கிமையல்னு ஓடினா எப்படிம்மா?" என்றவாறு மாதவன் குனிய,

"இருங்கள் மாது — நான் சிக்கன் சாப்பிட்டிருப்பது மறந்து விட்டதா? — வாயைக் கழுவிக் கொண்டு வரட்டுமா?" என்று கேட்க நினைத்த வசந்தா — 'எதற்கு? அவரே மறந்து விட்டதை நான் ஏன் வலிய ஞாபகப் படுத்த வேண்டும்?' என்கிற மாற்று எண்ணத்துடன் கைகளை அவன் கழுத்தில் மாலையாக்கியபடி மார்பில் ஒண்டிக் கொண்டாள்.

(தொடரும்)



# ஸ்னேகாவுக்கு ஒரு டீ.வி.

"இந்த வருஷம் போனஸிலாவது டி.வி. வாங்க வேண்டும்" என்றாள், ஸ்னேகா.

சட்டையை, 'இன்' பண்ணி முன்னும் பின்னும் சரிபார்த்துக் கொண்டிருந்த விக்னேஷ், மனைவிக்குப் பதில் சொல்லச் சரியான வார்த்தை கிடைக்காமல் திணறினான்.

"தினம்தினம் நல்ல நிகழ்ச்சிகள் எல்லாம் டி. வி. யில் காட்டுகிறார்கள். பார்த்துப் பார்த்து அக்கம்பக்கத்திலே பேசுவதைக் கேட்கிற போது மனசுக்கு ஏக்கமாய் இருக்கிறது" — அவளது சிவந்த கன்னம் நிஜமாகவே ஏங்கியது. ஆனால், அவனோ —

"பார்ப்போம்!" — என்ற முற்றுப் புள்ளியுடன் அலுவலகம் வந்தான்.

வேலை ஓடவில்லை.

ஸ்னேகாவுக்கு ஏதாவது பரிகாரம் காண வேண்டுமே. டி. வி. யா., டிமிக்கியா?

"என்ன விக்னேஷ், யோசனை? ஸ்விஸ் பாங்கிலே போட்ட பணம் அம்போவாயிடுச்சா?"

அடுத்த பிரிவு அருள்ராஜ், எதிர் நாற்காலியைச் சட்டென்று இழுத்துப் போட்டுக் கொண்டு கிண்டலாய்க் கேட்டான்.

தமிழினியன்



"நம் தலைவருக்கு 'ஏழை பங்காளன்' என்கிற பெயர் எப்படி வந்தது?"

"ஒரு தடவை ஏழைகளுக்கு 'பேங்க்' கொடுத்த மானியத் தொகையிலே தலைக்கு நூறு ரூபாய் வாங்கிக்கிட்டாராம்!"

— அ. தெய்வசிகாமணி.

விக்னேஷ் அவளைச் சட்டை பண்ணாமல், "நீ டீ. வி. வாங்கி விட்டாயா?" என்றான்.

"வாங்கணும் என்றுதான் ஆசை. ஆனால்... பிள்ளைகளோட படிப்புக் கெட்டுடும். அதை எண்ணித்தான் வாங்காமல் இருக்கிறேன்."

"கரெக்ட், எனக்கும் அதுதான் பிரச்னை. ஆனால், மனைவிதான் தொண தொணக்கிறாள். எப்படி? உன் ஒய்ஃபுக்கு டீ. வி. யில் இண்ட்ரஸ்ட் இல்லையா?"

"நன்றாய்க் கேட்டாய். போ. டீ. வின்னா அவளுக்கு உயிருப்பா. ஒலியும் ஒளியும் பார்க்கா விட்டால் அவளுக்குச் சோறே இறங்காது."

"அப்படின்னா எப்படி? எங்கே பார்க்கிறாள்?"

"அங்கேதான் இருக்கிறது சூட்சுமம். அடுத்த தெருவிலே நம்ம நரசிம்மன் வீடு இருக்கிறது. அவரது மனைவியும் இவளும் ரொம்பத் தோஸ்து. பிள்ளைகளை உருட்டி மிரட்டிப் படிக்க வெச்சுட்டு, அங்கே போயிடுவாள். இவள் போனதுமே அவர்கள் டீ.வி.யை ஆபரேட் பண்ணிடுவாங்க."

"அப்படியா...?" — முகத்தில் ஆச்சரியத்தைப் பரப்பினான் விக்னேஷ். ஆனால், மனம் ஆற்றாமையால் கனத்தது.

ஸ்னேகாவுக்கும்தான் சிநேகிதிகள் இருக்கிறார்கள். சிநேகிதிகள் வீட்டில் டீ.வி.யும் இருக்கிறது. பழக்கம் பிடித்து, வாய்ச் சாமர்த்தியமாய்ப் போகத் தெரிந்ததா, அவளுக்கு. முடிந்தவரை எதையும் ஓசியில் அனுபவிக்க வேண்டாமா? அதற்குத் துப்பில்லாமல் என் உயிரை எடுக்கிறாளே?

இனி டீ. வி. என்று கேட்கட்டும் அவள், வாயில் களிமண்ணை வைத்து அடைத்து விடுகிறேன்...

ஏக ஆத்திரத்துடன் தீர்மானம் செய்து கொண்டு அலுவலைக் கவனிக்க ஆரம்பித்தான், விக்னேஷ்.

"ரொம்ப பிஸியோ?" பழக்கமான குரல்.

நிமிர்ந்தான்.

நரசிம்மன்.

"அடேடே, வாங்க, சார்... கொஞ்ச நேரத்துக்கு முன்புதான் நானும் அருளும் உங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்."

"யார்... தொங்கு மீசை அருள்ராஜா?" — அருவருப்புச் சுழி ஒன்று நரசிம்மனின் முகத்தில் படர்ந்தது.

"ஆமாம். ஏன், சார்?"

"அவன் மனைவி கொஞ்சமும் விவஸ்தை இல்லாத ஜன்மம், விக்னேஷ். ஏதோ மரியாதைக்கு ஒருநாள் டீ. வி. போட்டுக் காட்டினால், அதுதான் சாக்கென்று தினமும் வந்து விடுகிறாள், அந்தப் பெண். 'நீங்களும் டீ.வி. வாங்குங்களேன்' என்று ஜாடை மாடையாய் என் மனைவியும் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறாள். அந்தப் பெண்ணின் புத்திக்கு எட்டவில்லையே..."

"எட்டாமல் இல்லை, சார்... ஹி... ஹி... பிள்ளைகளின் படிப்புக் கெடுமே என்று..." — அருள்ராஜின் மனைவிக்காகப் பரிந்துரைக்க முயன்றான், விக்னேஷ்.

"வாயை மூடுப்பா!" என்று அவசரமாக மறுத்தார் நரசிம்மன். "யார் வீட்டிலேதான் படிக்கிற பிள்ளைகள் இல்லை? பிறத்தி மனுஷர் எங்கள் வீட்டிலே வந்து டீ. வி. பார்த்தால் எங்கள் பிள்ளைகளோட படிப்புக் கெடாதா?"

"சார்..." என்று குறுக்கிட்டவனைப் பேச விடாமல் தொடர்ந்தார், அவர்:

"அதெல்லாம் அசட்டுத்தனம் மிஸ்டர் விக்னேஷ். டீ. வி. யால் படிப்புக் கெடுவது என்பதெல்லாம் சுத்த ஹம்பக். எதிலும் ஒரு கண்ட்ரோல் வேண்டும். அவ்வளவுதான். வாங்கின புதிதில் ஆர்வமாய் இருப்பார்கள். அப்புறம் ரேடியோ மாதிரி பழகிடும். எங்களுக்கு அப்படிப் பழக்கமாயிடுச்சு. தேவைப்பட்ட நேரத்தில் மட்டும்தான் பார்ப்போம். ஆனால், அருள்ராஜின் மனைவி மாதிரி ஓசியில் வருகிறவர்களால் தான் இப்போது எங்களுக்குத் தலைவேதனை!" — நரசிம்மனின் நொந்த மனம் நன்றாகத் தெரிந்தது.

விக்னேஷ், முகத்தில் ஒரு கடின பாவம் பரவ, மௌனமாய் இருந்தான். 'இரவல் டீ. வி. யில் இத்தனை பிரச்னை இருக்கிறதா?'

"என்ன மிஸ்டர் விக்னேஷ், நான் பேசியது உங்களுக்குப் பிடிக்கவில்லையா என்ன? திடீரென்று என்னவோ யோசனையில் ஆழ்ந்து விட்டீர்களே...?" என்றார், நரசிம்மன்.

"அதொண்ணும் இல்லை, சார். இந்த வருஷம் போனஸில் தான் டீ. வி. வாங்குவதாக முடிவு பண்ணிட்டேன்..." என்று சிரித்தான், விக்னேஷ் — ஸ்நேகாவின் முகத்தை மனத்தில் படர விட்டுக் கொண்டு.

ரவி அன்று மிகுந்த பதற்றத்துடன் காணப்பட்டான். எட்டரை மணியாகிவிட்டது.

பத்து மணிக்கு ஒரு பிரபலகம்பெனி நடத்தவிருக்கும் நேர்முகத் தேர்வில் அவன் கலந்து கொள்ள வேண்டியிருந்தது. இஷ்ட தெய்வத்தை வேண்டிக் கொண்டு அந்தக் கம்பெனிக்குப் போய்ச் சேரும் போது மணி ஒன்பதே முக்கால் ஆகிவிட்டது. அங்கே கூடியிருந்த கூட்டத்தைப் பார்த்ததும் அவனது பதற்றம் இன்னும் அதிகரித்தது. லேசாக அரும்பிய வியர்வையைத் துடைத்துக் கொண்டு இருக்கையில் அமர்ந்தான். அவனது பெயர் இரண்டு முறை அழைக்கப்படுவதை உணர்ந்து சட்டென இண்டர்வியூ நடக்கும் அறைக்குள் நுழைந்தான்.

"குட்மார்னிங் சார்" என்று சொல்லிவிட்டு,

"டேக் யுவர் சீட்" என்ற வார்த்தையைக் கேட்டதும் ஓர் இருக்கையில் அமர்ந்தான். ஐந்து பேர் அடங்கிய ஒரு குழு அவனை விசாரிக்கத் துவங்கியது. அனைவருமே ஆங்கிலத்தில் கேள்வி மேல் கேள்வியாகக் கேட்டுக் கொண்டே இருந்தார்கள். ரவி அவர்கள் கேட்ட கேள்விகளைப் புரிந்து கொண்டானே தவிர, தட்டுத் தடுமாறி தமிழில்தான் அவனால் பதில் கூற முடிந்தது.

இறுதியாக நேர்முகத் தேர்வு நடத்துபவர் கூறினார்:

"ரவி நீங்கள் பொருளாதாரத்தில் முதல் வகுப்பில் பாஸ் செய்திருக்கிறீர்கள். ஆனால் நாங்கள் ஆங்கிலத்தில் கேட்கும் கேள்விகளுக்கு உங்களால் பதிலளிக்க முடியவில்லை.-"

"நாங்கள் உங்களுக்குத் தரப் போகும் வேலை மிகவும் பொறுப்பு வாய்ந்தது. கம்பெனி விஷயமாக பார்ட்டியிடம் நீங்கள் 'ஆங்கிலத்தில்' சரளமாகப் பேச வேண்டியிருக்கும். ஸாரி மிஸ்டர் ரவி" என்று அவர் கூறி முடித்ததும், தான் கொண்டு வந்திருந்த ஃபைல் கை நழுவி விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு வெளியேறினான். ரவி.

ரவியைப் போல் எத்தனையோ பேர் நல்ல வாய்ப்புக்களை ஆங்கிலத்தில் பேசத் தெரியாத ஒரே குறையினால் நழுவ விடுகிறார்கள்.

மேலும் வியாபாரிகள், அலுவலகத்தில் பணிபுரிவோர், ஆசிரியர்கள், சொந்தமாகத் தொழில் புரிவோர், இல்லத்தரசிகள் போன்று பல்வேறு துறைகளில் ஈடுபட்டுள்ளவர்களிடையேயும் 'ஆங்கிலத்தில் பேச முடியவில்லையே' என்ற பெருங்குறை இருந்து வருகிறது.

இக்கருத்தை மனதிற் கொண்டு 'விவேகானந்தா கல்வி நிலையத்தினர்' நீங்கள் ஆங்கிலத்தில் தயக்கமின்றி, சரளமாக உரையாடவும்,

இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுதவும்,

தபால் முறையில் மிகச் சிறந்த பயிற்சியளித்து வருகிறார்கள்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு."

இப்பயிற்சி பற்றி விரிவான விளக்கம் பெற கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொண்டு பயன் பெறுங்கள்: விவேகானந்தா கல்வி நிலையம், நம்பர் 9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை — 600 017.




விவேகானந்தா கல்வி நிலையம் (Regd)

9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை - 600 017




## அத்தியாயம் 35

# இலங்கைச் சிங்காதனம்



பிக்ஷு கையில் பிடித்த தீபத்தின் வெளிச்சத்தில் சுற்று முற்றும் ஒரு கணம் பார்த்தார். இளவரசரும் அவருடைய தோழர்களும் நிற்பதைக் கண்டு கொண்டார் போலும். மறு கணம் விளக்கும் வெளிச்சமும் மறைந்தன. சிறிது நேரத்துக்கெல்லாம் பிக்ஷு தடாகத்தின் படிக்கட்டுகளின் வழியாக நடந்து வருவது தெரிந்தது. இளவரசர் நிற்குமிடத்துக்கு வந்தார். நிலா வெளிச்சத்தில் அவருடைய திருமுகத்தை ஏறிட்டுப் பார்த்தார்.

"தேவப்ரியா! வருக! வருக! தங்களை எதிர் நோக்கி வைதுல்ய பிக்ஷு சங்கம் காத்திருக்கிறது. மகா தேரோ குருவும் விஜயம் செய்திருக்கிறார். குறிப்பிட்ட நேரம் தவறாது தாங்கள் வந்து சேர்ந்தது பற்றி என் உள்ளம் உவகை கொண்டு நன்றி செலுத்துகிறது!" என்றார்.

"அடிகளே! இந்தச் சிறுவனிடம் பல குறைகள் குடிகொண்டிருப்பதை அறிந்துள்ளேன். எனினும், வாக்குத் தவறுவதில்லை என்ற ஒரு நல்விரதத்தை அனுசரித்து வருகிறேன். அந்த விரதத்தில் என்றும் தவறியதில்லை!" என்றார் பொன்னியின் செல்வர்.

"இன்று சூரியன் அஸ்தமிக்கும் நேரம் வரையில் தாங்கள் வந்து சேரவில்லை என்று அறிந்தேன். அதனால் சிறிது கவலை ஏற்பட்டது."

"முன்னதாக வந்திருந்தால், ஒரு வேளை வாக்கை நிறைவேற்ற முடியாமல் போயிருக்கலாம். அதனாலேயே சமயத்திற்கு வந்து சேர்ந்தேன்."

"ஆம், ஆம்! வானில் ஜோதி மயமாக ஒளிரும் கதிரவனை மறைத்து விடுவதற்குப் பல மேகத் திரள்கள் சுற்றி வருகின்றன. நாங்களும் அறிந்துள்ளோம். ஆனால் அந்த மேகத் திரள்கள் எல்லாம் புத்த பகவானுடைய கருணை யென்னும் பெருங் காற்றினால் சின்னா பின்னமாகிக் கலைந்து விடும். போகட்டும்! இதோ நிற்பவர்கள் யார்? தாங்கள் நன்கு அறிந்தவர்கள்தானா? தங்களின் பூரண நம்பிக்கைக்கு உரியவர்களா? கொடுத்த வாக்கைத் தவறாது நிறைவேற்றக் கூடியவர்களா?" என்று பிக்ஷு கேட்டார்.

"அடிகளே! என்னுடைய கரங்கள் இரண்டையும் எப்படி நான் நம்புகிறேனோ, அப்படியே இந்த நண்பர்களையும் நம்புகிறேன். எனினும் தங்களுக்கு

அமரர் கல்கி

விருப்பமில்லையென்றால் இவர்களை இங்கேயே விட்டு விட்டுத் தங்களுடன் தனித்து வரச் சித்தமாயிருக்கிறேன்!'' என்றார் இளவரசர்.

''இல்லை, இல்லை! அவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்றுக்கொள்ள நான் சித்தமாயில்லை. தங்களை நான் அழைத்துப் போகும் இடம் மிகப் பத்திரமானதுதான். ஆயினும், நீண்ட வழியில் போக வேண்டும். எந்த மூலையில் எந்தத் தூணுக்குப் பின்னால் என்ன அபாயம் மறைந்திருக்கும் என்று யார் சொல்ல முடியும்? இவர்கள் இருவரும் அவசியம் வரட்டும்!'' என்றார் பிக்ஷு.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவனுடைய உள்ளம் கொந்தளித்தது. முன்பின் அறியாத தன்னிடம் இளவரசர் இவ்வளவு பரிபூரண நம்பிக்கை காட்டி மிக அந்தரங்கமான காரியத்துக்கு அழைத்து வந்ததை நினைத்துப் பூரிப்பு உண்டாயிற்று. இன்றிரவு ஏதோ முக்கியமான நிகழ்ச்சி நடைபெறப் போகிறது. அது என்னவாயிருக்கும் என்ற நினைவு பரபரப்பை அளித்தது.



க்ஷு முன்னால் சென்று வழிகாட்ட மற்றவர்கள் பின் தொடர்ந்து சென்றார்கள். தடாகத்தின் படிக்கட்டுகளின் வழியாகச் சென்று பின் புறத்துக் கல் சுவரில் குடைந்து அமைந்திருந்த அறையில் புகுந்தார்கள். அதன் ஒரு பக்கம் சென்று இருட்டில் பிக்ஷு ஏதோ செய்தார். உடனே ஒரு வழி ஏற்பட்டது. உள்ளே வெளிச்சம் காணப்பட்டது. பிக்ஷு அங்கு வைத்திருந்த தீபத்தைக் கையில் ஏந்திக் கொண்டார். மற்ற மூவரும் உள்ளே வந்ததும் வழியும் அடைபட்டது. வெளியே தடாகத்தில் சிங்க முகத்திலிருந்து விழுந்த அருவியின் ஓசை மிக இலேசாகக் கேட்டது. இல்லாவிட்டால் ஒரு கணத்துக்கு முன்னால் அப்படி தடாகக் கரையில் நின்று கொண்டிருந்தோம் என்பதையே அவர்களால் நம்ப முடியாமல் போயிருக்கும்.

குறுகலான சுரங்கப் பாதை வழியாக அவர்கள் சென்றார்கள். பாதை வளைந்து வளைந்து சென்றது. முடிவில்லாமல் சென்று கொண்டிருப்பதாகத் தோன்றியது. அவர்கள் காலடிச் சப்தமும் அதன் எதிரொலியும் பயங்கரத்தை உண்டாக்கின. வந்தியத்தேவனுக்கு நடு நடுவே இளவரசர் ஏமாந்து போய் ஏதோ ஒரு சூழ்ச்சியில் சிக்கிக் கொண்டாரோ என்ற ஐயம் உண்டாயிற்று.

பாதை அகன்று அகன்று வந்து கடைசியில் ஒரு மண்டபம் தெரிந்தது. எப்பேர்ப்பட்ட மண்டபம்? பிக்ஷு கையில் பிடித்து வந்த தீபத்தில் சிறிய பகுதிதான் மங்கலாகக் கண்ணுக்குப் புலனாயிற்று. ஆயினும் அதன் தூண்கள் பளிங்குக் கல்லினால் ஆன தூண்கள் என்பது தெரிந்தது. நாற்புறமும் புத்தர் சிலைகள் தரிசனம் தந்தன. நிற்கும் புத்தர்கள், படுத்திருக்கும் புத்தர்கள், போத நிலையில் அமர்ந்திருக்கும் புத்தர்கள், ஆசீர்வதிக்கும் புத்தர்கள், பிரார்த்தனை செய்யும் புத்தர்கள்,— இப்படிப் பல புத்தர் சிலைகள் தோன்றின.

பளிங்கு மண்டபத்தைத் தாண்டி அப்பால் சென்றார்கள். மறுபடி ஒரு குறுகிய பாதை. பின்னர் இன்னொரு மண்டபம். இதன் தூண்கள் தாமிரத் தகடுகளினால் ஆனவை. இரத்தினச் சிவப்பு நிறம் பெற்றுத் திகழ்ந்தன. இந்த மண்டபத்தின் மேற் கூரையிலும் செப்புத் தகடுகள், அவற்றில் பல வகைச் சித்திர வேலைப்பாடுகள், நாலாபுறமும் விதவிதமான புத்தர் சிலைகள். இம்மாதிரியே, அபூர்வமான மஞ்சள் நிற மரத் தூண்களை உடைய மண்டபம், யானைத் தந்தங்களால் இழைத்த தூண்களை உடைய மண்டபம், பொன்னும் மணியும் இழைத்த தூண்களைக் கொண்ட மண்டபம்,— இவற்றையெல்லாம் கடந்து சென்றார்கள். அதி வேகமாக நடந்து சென்ற போதிலும் வந்தியத்தேவன் அங்கங்கே தூண்களைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே போனான். இளவரசர் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாது முன்னோக்கிய பார்வையுடன் சென்றது அவனுக்கு அளவிலா வியப்பை அளித்தது.



லோக மண்டபங்களையெல்லாம் தாண்டிக் கடைசியில் சாதாரண கருங்கல் மண்டபம் ஒன்றுக்கு வந்து சேர்ந்தார்கள். ஆனால் விசாலமான அம் மண்டபத்தில் அபூர்வமான காட்சி தென்பட்டது. முந்தைய மண்டபங்களில் புத்தர் பெருமானின் சிலைகளைத் தவிர மனிதர் யாருமில்லை. இந்தக் கருங்கல் மண்டபத்தில் புத்த பிக்ஷுக்கள் பலர் கூடியிருந்தார்கள். அவர்களுடைய முக மண்டலங்கள் தேஜஸ் நிறைந்து திகழ்ந்தன. அவர்களுக்கு மத்தியில் மகா தேரோ குரு நடுநாயகமாக ஒரு பீடத்தில் வீற்றிருந்தார். அவருக்கு எதிரே நவரத்தின கசிதமான ஒரு தங்கச் சிங்காதனம் காணப்பட்டது. அதன் அருகில் ஒரு பீடத்தின் மேல் மணி மகுடம் ஒன்றும் உடைவாளும்செங்கோலும்இருந்தன. மண்டபத்தில் நாலாபுறமும் தீபங்கள் எரிந்தன. தீபச் சுடரின் ஒளியில் தங்கச் சிங்காதனமும் மணி மகுடமும் உடைவாளும்ஜொலித்துத்திகழ்ந்தன.

இளவரசர் முதலியோர் அந்த மண்டபத்துக்குள் நுழைந்ததும் பிக்ஷுக்கள் அனைவரும் எழுந்து நின்று "புத்தர் வாழ்க" "தர்மம் வாழ்க" "சங்கம் வாழ்க" என்று கோஷித்தார்கள்.

இளவரசர் மகா தேரோ குருவின் சமீபம் வந்து வணங்கி நின்றார்.

பிக்ஷுக்களின் அத்தியட்சகர் சிங்காதனத்துக்கு அருகில் கிடந்த ஒரு சாதாரண பீடத்தைச் சுட்டிக் காட்டி, அதில் அமரும்படி இளவரசரை வேண்டினார்.

"மகா குருவே! இச் சிறுவனுக்கு முன்னால் பிராயத்திலும் தர்மத்திலும் மூத்தவர்களாகிய தாங்கள் அமர வேண்டும்" என்று வேண்டினார் இளவரசர்.



த்தியட்சக மகா குரு தமது பீடத்தில் அமர்ந்ததும் இளவரசரும் தமக்கென்று குறிப்பிட்ட ஆசனத்தில் பணிவுடன் உட்கார்ந்தார்.

"தேவர்களின் அன்புக்குரிய இளவரசரே! தங்கள் வருகையினால் இந்த மகா போதி சங்கம் மிக்க மகிழ்ச்சி அடைந்திருக்கிறது. நாங்கள் குறிப்பிட்ட நிபந்தனைகளையெல்லாம் ஒப்புக் கொண்டு பல சிரமங்களுக்கு உட்பட்டு வந்திருக்கிறீர்கள். புத்த பகவானுடைய கருணை தங்களிடம் பூரணமாக இருப்பதற்கு வேறு அத்தாட்சி தேவையில்லை!"— இவ்விதம் பாலி பாஷையில் பெரிய குரு கூற, இளவரசரை அழைத்து வந்த பிக்ஷு தமிழில் மொழி பெயர்த்துச் சொன்னார். மற்ற பிக்ஷுக்கள் "சாது! சாது!" என்று கோஷித்துத் தங்கள் சந்தோஷத்தை வெளியிட்டார்கள்.

மகா தேரோ மேலும் கூறலுற்றார்:— "இலங்கைத் தீவுக்குப் புத்த தர்மத்தை அனுப்பிய பாரத வர்ஷத்துக்கு நாங்கள் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறோம். ஆனால் ஆதி நாளிலிருந்து உங்கள் நாட்டிலிருந்து படையெடுத்து வந்த சோழர்கள், பாண்டியர்கள், மலையாளத்தார், கலிங்கத்தார் எல்லாரும் இங்கே பல அட்டூழியங்களைச் செய்ததுண்டு. புத்த விஹாரங்களையும் பிக்ஷுக்களின் மடாலயங்களையும் குருகுலங்களையும் அவர்கள் இடித்துத் தள்ளி தேவர்களின் சாபத்துக்கு ஆளானார்கள். உங்கள் நாட்டவரைச் சொல்வானேன்? இந்த நாட்டின் மன்னர்களே அத்தகைய கோர கிருத்யங்களைச் செய்திருக்கிறார்கள். புத்த சங்கத்தில் பிரிவினையை ஏற்படுத்தினார்கள். தங்களுடைய தீய செயல்களை எதிர்த்த பிக்ஷுக்களின் விஹாரங்களை இடித்தார்கள்; அக்கினிக்கு இரையாக்கினார்கள். இரண்டு காத நீளமும் ஒரு காதம் அகலமும் உள்ள இந்த விசாலமான புண்ணிய நகரத்தில் ஒரு சமயம் பாதி விஸ்தீரணத்தில் புத்த விஹாரங்கள் இருந்தன. அவற்றில் பெரும் பகுதி இன்று இடிந்து பாழாய்க் கிடக்கின்றன. இடிந்த விஹாரங்களைப் பழுது பார்த்துச் செப்பனிட்டுக் கொடுக்க வேண்டும் என்று இதுவரை எந்த அரச குலத்தினரும் கட்டளையிட்டதில்லை. அத்தகைய ஆக்ஞை பிறப்பிக்கும் பாக்கியம் இளவரசர் அருள்மொழிவர்மருக்கே கிடைத்தது. தேவர்களுக்கு உகந்தவரே! தங்

களுடைய இந்தச் செய்கையைப் புத்த மகா சங்கம் பெரிதும் பாராட்டுகிறது...."

இளவரசர் தலை வணங்கி மகா தேரோவின் வாழ்த்தை ஏற்றுக் கொண்டார்.

"இன்னும், இந்தப் புராதன புண்ணிய நகரத்தில் வெகு காலமாகப் பெரஹரா உற்சவம் நடைபெறாமல் தடைப்பட்டிருந்தது. நூறு ஆண்டுகளுக்கு முன்னால் பாண்டியர்கள் ஒரு சமயம் இந்த மாநகரத்தைப் பிடித்தார்கள். அப்போது இலங்கை அரச குலத்தார் புலஸ்திய நகரம் சென்றார்கள். அது முதல் இங்கே பெரஹராத் திருவிழா நடைபெற்றதில்லை. இந்தப் புண்ணிய வருஷத்தில் தாங்கள் அவ்வுற்சவம் மீண்டும் நடைபெறலாம் என்று கட்டளையிட்டீர்கள். அதற்கு வேண்டிய வசதியும் அளித்தீர்கள். இதுபற்றியும் புத்த சங்கத்தார் சந்தோஷ மடைந்திருக்கிறார்கள்....."

இளவரசர் மீண்டும் சிரம் வணங்கி "மகா குருவே! அடியேன் புத்த சங்கத்தாருக்கு இன்னும் ஏதேனும் சேவை செய்யக் கூடியதாக இருந்தால் கருணை கூர்ந்து பணித்தருள்க!" என்றார்.

அத்தியட்சகர் புன்னகை புரிந்து, "ஆம், இளவரசரே! புத்த சங்கம் மேலும் தங்களுடைய சேவையை நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறது. அதற்கு முன்னதாக, இன்னும் சில வார்த்தைகள் கூற வேண்டும். புத்த பகவான் கடைசித் திரு அவதாரத்துக்கு முன்னால் வேறு பல அவதாரங்களில் தோன்றியதாக அறிந்திருப்பீர்கள். ஒரு சமயம் சிபிச் சக்கரவர்த்தியாக அவதரித்துக் கொடுமை நிறைந்த இந்த உலகத்தில் ஜீவகாருண்யத்தின் பெருமையை உணர்த்தினார். ஒரு சிறிய புறாவின் உயிரைக் காப்பாற்றும் பொருட்டுத் தமது திருமேனியின் சதையைத் துண்டு துண்டாக அவர் அரிந்து துலாக்கோலில் இட்டார். அந்தச் சிபிச் சக்கரவர்த்தியின் வம்சத்திலே வந்தவர்கள் என்று சோழ குலத்தவராகிய நீங்கள் சொல்லிக் கொள்கிறீர்கள். சிபியின் வம்சத்தில் வந்த காரணம் பற்றிச் 'செம்பியன்' என்ற பட்டப் பெயரும் சூடிக் கொள்கிறீர்கள். ஆனால் இது வரையில் புத்த சங்கத்தார் அதை நம்பவில்லை. சோழ குலத்துப் புரோகிதர்கள் கட்டிய கதை என்றுதான் எண்ணியிருந்தார்கள். இன்று— தங்களுடைய அரும்பெரும் செயல்களைப் பார்த்த பிறகு,— சிபிச் சக்கரவர்த்தியின் பரம்பரையில் வந்தவர்கள் சோழர்கள் என்று ஒப்புக் கொள்ள வேண்டி வருகிறது. புத்த பகவானுடைய பெருங் கருணையை மாயை காரணமாக இதுகாறும் சோழ குலம் மறந்திருந்தது. அந்தக் கருணை இன்றைய தினம் தங்கள் மீது ஆவிர்ப்பவித்திருக்கிறது. அதற்கான சூசகமும் கிடைத்திருக்கிறது. இதோ!..." என்றுகூறி அத்தியட்சகதேரோ பின்னால் திரும்பிப் பார்த்ததும், பிக்ஷுக்கள் சிலர் பீடம் ஒன்றில் சாய்ந்து படுத்திருந்த மற்றொரு பிக்ஷுவைப் பீடத்துடன் தூக்கிக் கொண்டு வந்தார்கள். அந்தப் பிக்ஷுவின் உடம்பெல்லாம் இடைவிடாமல் நடுங்கிக் கொண்டிருந்தது. கைகள் வெட வெட வென்று நடுங்கின; கால்கள் நடுங்கின; உடம்பு நடுங்கிற்று; தலை ஆடிற்று; பற்கள் கிட்டின; உதடுகள் துடித்தன; சிவந்த கண்களுக்கு மேலே புருவங்களும் அசைந்தன.

"இந்த பிக்ஷுவின் பேரில் முப்பத்து முக்கோடி தேவர்களும் ஆவிர்ப்பவித்திருக்கிறார்கள். தேவர்கள் கருணை கூர்ந்து சொல்வதைக் கேட்டுக் கொள்ளுங்கள்!" என்றார் மகா தேரோ.



ஆவேசங் கொண்டிருந்த புத்த பிக்ஷுவின் வாயிலிருந்து நடுநடுங்கிக் குளறிய குரலில் ஏதேதோ மொழிகள் அதிவிரைவாக வந்தன. அவர் பேசி நிறுத்தியதும் அத்தியட்சக குரு கூறினார்: "முப்பத்து முக்கோடி தேவர்களும் தங்களை ஆசீர்வதிக்கிறார்கள். முற்காலத்தில் தேவனாம்பிரிய அசோக வர்த்தனர் பாரத பூமியை ஒரு குடையில் ஆண்டு புத்த தர்மத்தை உலகமெல்லாம் பரப்பினார். அத்தகைய மகா சாம்ராஜ்யத்துக்குத் தாங்கள் அதிபதியாவீர்கள் என்று தேவர்கள்

ஆசிர்வதிக்கிறார்கள். அசோகரைப் போல் தாங்களும் புத்த தர்மத்தை உலகில் பரப்ப வேண்டும் என்று விரும்புகிறார்கள். அசோகர் பாடலிபுத்திரச் சிம்மாசனத்தில் வீற்றிருந்து செய்த தர்மப் பெரும் பணிகளைத் தாங்கள் இந்தத் தொன்மை மிக்க அநுராதபுரத்தில் ஆரம்பித்து நடத்த வேண்டுமென்று கட்டளையிடுகிறார்கள். இளவரசே! தேவர்களுடைய கட்டளைகளுக்குத் தங்கள் மறுமொழி என்ன?''

இதைக் கேட்டதும் இளவரசர், ''மகா குரு! தேவர்கள் சக்தி வாய்ந்தவர்கள். அவர்கள் சித்தப்படி நடத்திக் கொள்ளுவார்கள். ஆனால் அடியேனுக்கு இப்போது அவர்கள் இடும்பணி யாது என்று விளங்கவில்லையே?'' என்றார்.

''அதை நானே தெரிவிக்கிறேன்'' என்று அத்தியட்சக தேரோ கூறிச் சமிக்ஞை செய்ததும், ஆவேசம் வந்திருந்த பிக்ஷுவை அப்பால் எடுத்துச் சென்றார்கள். பின்னர் பிக்ஷு தலைவர் கூறினார்: ''இளவரசே! இதோ உங்கள் முன்னால் உள்ள சிங்காதனத்தைப் பாருங்கள். மணிமகுடத்தைப் பாருங்



கள், செங்கோலையும் பாருங்கள். இலங்கை இராஜ வம்சத்தைச் சேர்ந்த மன்னர்கள் அனைவரும் இந்தச் சிங்காதனத்தில் அமர்ந்து, இந்த மணி மகுடத்தை அணிந்து, இந்தச் செங்கோலைக் கையில் தரித்த பிறகே, புத்த சங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட அரசர்களானார்கள். துஷ்டகமனு சக்கரவர்த்தியும் தேவானாம்பிரிய திஸ்ஸரும் மகாசேனரும் அமர்ந்து முடி சூடிய சிங்காதனம் இது! அவர்கள் சிரசில் தரித்த கிரீடம் இது; அவர்கள் கரத்தில் ஏந்திய செங்கோல் இது. இப்படிப்பட்ட புராதன சிங்காதனம், — ஆயிரம் ஆண்டுகளாக அரசர்களைச் சிருஷ்டித்த சிங்காதனம்,— இதோ தங்களுக்காகக் காத்திருக்கிறது. இதில் அமரவும் இந்த மணி மகுடமும் செங்கோலும் தரிக்கவும் தங்களுக்குச் சம்மதமா?''



தையெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த வந்தியத்தேவன் மிக்க பரபரப்பை அடைந்தான். இளவரசரைத் தூக்கி அந்தச் சிம்மாசனத்தில் அந்தக் கணமே உட்கார வைத்து விட்டால் என்ன என்று எண்ணினான். ஆனால் இளவரசருடைய முக பாவத்தில் எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை.

முன்போலவே அமைதியான குரலில், "அத்தியட்சகா! அது எப்படிச் சாத்தியம்? இந்தச் சிங்காதனத்தில் ஏறி முடி சூடிய மகிந்த மன்னர் இன்னும் ஜீவியவந்தராக இருக்கிறாரே? அவர் இருக்குமிடம் தெரியாவிட்டாலும்......'' என்று கூறி நிறுத்தினார்.

"இளவரசே! இலங்கை இராஜ வம்சம் மாற வேண்டும் என்பது தேவர்களின் கட்டளை. அது நடந்தே தீரும். கங்கை பாயும் வங்க நாட்டிலிருந்து வந்த விஜயராஜன் ஸ்தாபித்த இந்த வம்சத்தில் எத்தனையோ மகா ராஜர்கள் தோன்றினார்கள்; தர்மத்தையும் பரிபாலித்தார்கள். ஆனால் பிற்காலத்தில் இந்த வம்சம் பல கொடிய கிருத்யங்களைச் செய்து தேவ சாபத்துக்கு ஆளாகி விட்டது. இந்த வம்சத்தில் பிறந்தவர்களிலே தகப்பன் மகனைக் கொன்றான்; மகன் தகப்பனைக் கொன்றான்; அண்ணனைத் தம்பி கொன்றான்; தம்பியை அண்ணன் கொன்றான்; தாய் மகனைக் கொன்றாள்; மருமகள் மாமியாரைக் கொன்றாள். இத்தகைய மகா பாதகங்களைச் செய்த வம்சத்தவர்கள் புத்த தர்மத்தைப் பரிபாலிக்கத் தகுதி வாய்ந்தவர்கள் அல்ல என்று தேவர்கள் கட்டளையிடுகிறார்கள். கடைசியாக முடி சூடிய மகிந்தன் இலங்கைச் சிம்மாதனத்துக்கு உரிமையை இழந்து விட்டான். அவனுக்குச் சந்ததியும் இல்லை. ஆகையால் இராஜ வம்சம் எப்படியேனும் மாறியே தீர வேண்டும். அப்படி இராஜ வம்சம் மாறும்போது புதிய வம்சத்தின் முதல்வனைத் தேர்ந்தெடுக்கும் உரிமை இந்தச் சங்கத்துக்கு உண்டு. இந்தச் சங்கத்தாரும் தங்களைத் தெரிந்தெடுக்க விரும்புகிறார்கள். தாங்கள் சம்மதம் கொடுத்தால் இன்று இரவே முடிசூட்டு விழா நடத்தி விடலாம்......''

அந்த மண்டபத்தில் சிறிது நேரம் பூகர்ப்பத்திலும் கடலின் ஆழத்திலும் குடிகொண்டிருப்பது போன்ற நிசப்தம் குடி கொண்டிருந்தது. வந்தியத்தேவனுடைய பரபரப்பு உச்ச நிலையை அடைந்து விட்டது.

அச்சமயத்தில் பொன்னியின் செல்வர் தமது பீடத்திலிருந்து எழுந்து புத்த பிக்ஷுக்களின் சங்கத்துக்கு வணக்கம் செலுத்தினார். வந்தியத்தேவன் குதூகலத்தின் எல்லையை அடைந்தான். இளவரசர் சிம்மாதனத்தில் அமர்ந்ததும் மணி மகுடத்தை எடுத்துத் தானே சூட்டி விடலாம் என்று ஆத்திரப்பட்டான்.

இளவரசர் கூறினார்: — "மகான்களே! உங்களை நமஸ்கரிக்கிறேன். இந்தச் சிறுவனிடம் எல்லையில்லா அன்பும் நம்பிக்கையும் வைத்து இந்தப் புராதன சிங்காதனத்தை அளிக்க முன் வந்த உங்கள் பெருந்தன்மையைப் போற்றி வணங்குகிறேன். ஆனால் தாங்கள் இப்போது இடும் பணி என் சக்திக்கு அப்பாற்பட்டது. நான் சோழ நாட்டில் பிறந்து வளர்ந்தவன். அந்த நாட்டு நிலங்கள் தந்த உணவும் நதிகள் அளித்த நீரும் இந்த

உடலை ஆக்கினை. என் தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தியின் கட்டளைக்கு உட்பட்டு இங்கே வந்தேன். அவருடைய விருப்பத்தை அறியாமல் எதுவும் என்னால் செய்ய இயலாது....."

பிக்ஷு குறுக்கிட்டுக் கூறினார்: — "இளவரசே! தங்கள் தந்தை சுந்தர சோழர் இன்று சுதந்திரமின்றிச் சிறையில் இருப்பது போல் இருப்பதை நீர் அறியீரா?"

"ஆம்; என் தந்தை நோய்வாய்ப் பட்டுப் படுத்த படுக்கையில் இருக்கிறார். கால்களின் சுவாதீனத்தை இழந்திருக்கிறார். ஆயினும் அவருடைய பெயரால், — அவரிடம் அதிகாரம் பெற்று, — சோழ நாட்டை ஆளுவோரின் கட்டளைக்கு நான் உட்பட்டவன். அவர்களுடைய கட்டளையின்றி நான் இந்தச் சிங்காதனத்தை ஏற்றுக் கொண்டால் தேசத் துரோகியும் ராஜத்துரோகியும் ஆவேன்..."

"அவ்வாறு தாங்கள் கருதுவதாயிருந்தால் தஞ்சாவூருக்குத் தூது கோஷ்டி ஒன்றை அனுப்பச் சித்தமாயிருக்கிறோம். தங்கள் தந்தையார் புத்த தர்மத்தில் மிகப் பற்றுக் கொண்டவர். எங்கள் வேண்டுகோளை நிராகரிக்க மாட்டார்..."

"இந்த நாட்டின் பிரஜைகள் இருக்கிறார்கள். அவர்களுடைய சம்மதமின்றி இராஜ்யத்தை விநியோகிக்க யாருக்கு உரிமை உண்டு?"

"தங்களை அரசராகப் பெறுவதைப் பெறற்கரிய பேருக இந்நாட்டுப் பிரஜைகள் கருதுவார்கள்."

"எல்லாரும் சம்மதிக்கலாம்; மகிழ்ச்சியும் அடையலாம். இந்த உலகில் வேறு யாருடைய விருப்பத்தையும் காட்டிலும் நான் அதிகமாக மதிப்பது என் தமக்கையாரின் விருப்பத்தையே. என் அன்னை என்னைப் பெற்றாள்; பொன்னி நதி என் உயிரைக் காப்பாற்றி அளித்தாள். ஆனால் என் தமக்கை என் அறிவை வளர்த்து அகக் கண்களைத் திறந்தாள். அப்படிப்பட்டவருடைய விருப்பத்தைக் காட்டிலும் என் உள்ளத்திலே உள்ள ஒரு குரலின் கட்டளையே எனக்கு மேலானது. மகா புருஷர்களே! தாங்கள் இச்சிறுவனுக்கு மனமுவந்து அளிக்கும் மகா பாக்கியத்தை ஏற்றுக் கொள்ளும்படி என் உள்ளக் குரல் எனக்குச் சொல்லவில்லை! தயவு செய்து இச்சிறுவனை மன்னித்து அருளுங்கள்!..."

மறுபடியும் அந்த மகா சபையில் சிறிது நேரம் மௌனம் குடிகொண்டிருந்தது. வந்தியத்தேவனுடைய நாடி நரம்புகள் படபடவென்று துடித்த சத்தம் அவன் காதில் மட்டும் விழுந்தது.



சற்றுப் பொறுத்து, பிக்ஷு சங்கத்தின் அத்தியட்சகர் கூறினார்: — "இளவரசே! தாங்கள் கூறிய மறுமொழி எனக்கு அதிக வியப்பை அளிக்கவில்லை. ஒருவாறு எதிர்பார்த்தேன். இதனாலேயே இந்த இலங்கைச் சிங்காதனத்தில் ஏற எவரிலும் அதிக தகுதி வாய்ந்தவர் தாங்கள் என்று ஏற்படுகிறது. தர்ம சூக்ஷ்மத்தை உணர்ந்த எங்களுக்கு இதைப் பற்றிச் சிறிதும் சந்தேகம் கிடையாது. ஆனால் தங்களை வற்புறுத்தவும் விரும்பவில்லை. யோசிப்பதற்கு அவகாசம் கொடுக்கிறோம். ஓராண்டுக்குப் பிறகு இதே மாதிரி ஒரு நாள் தங்களுக்குச் சொல்லி அனுப்புகிறோம். அப்போது வந்து தங்கள் முடிவான கருத்தைத் தெரிவிப்பீராக!...... ஒரு விஷயம் மட்டும் நினைவிருக்கட்டும். இந்தப் புராதன அநுராதபுரத்தில் பல புத்த விஹாரங்கள் மூர்க்கமான யுத்தக் கொடுமைகளினால் பாழாய்ப் போயிருக்கின்றன. ஆனால் இந்த மகா போதி விஹாரத்துக்கு மட்டும் எவ்விதச் சேதமும் இதுவரை ஏற்படவில்லை. ஏனெனில் இது பூமிக்குக் கீழே குடைந்து அமைத்த விஹாரம். இங்கே வரும் வழி இவ்விடத்தில் தற்சமயம் கூடியிருக்கும் புத்த சங்கத் தலைவர்களுக்கு மட்டுமே தெரியும். எங்களில் ஒருவர் வழிகாட்டாமல் இங்கே யாரும் வர முடியாது. இலங்கை மன்னர்கள் தங்கள் வாழ்க்கையில் ஒரு தடவை, புத்த சங்கத்தாரால் முடி சூடிக் கொள்வதற்கு மட்டுமே, இங்கு அழைக்கப்படுவார்கள். அத்தகைய புனிதமான இரகசியப் பாதையுள்ள விஹாரம் இது. இங்கே தாங்கள் வந்



**போ**லீஸையும் கோர்ட்டையும் விருத்தி செய்வதைவிட தர்மக்ஞர்களை விருத்தி பண்ணுவதில் ராஜாங்கம் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். சொந்த நலன்களைக் கருதாமல், உபதேசத்தைப் பணம் பண்ணும் தொழிலாக்காமல், பரோபகாரமே லட்சியமாகக் கொண்டு சாந்தமாகத் தர்மங்களை எடுத்துச் சொல்கிறவர்களுக்கு ராஜாங்கம் உற்சாகம் தரவேண்டும். இந்த உற்சாகத்தாலேயே மேலும் பலர் அவ்விதம் உருவாவார்கள். எடுத்துச் சொல்வதை

தது. போனது. இங்கே நடந்தது எதையும் பற்றி வெளியில் யாருக்கும் சொல்லக் கூடாது. தங்களுடைய நண்பர்களும் சொல்லக் கூடாது. சொன்னால் மிகக் கடுமையான தேவ சாபத்துக்கு உள்ளாகும்படி நேரிடும்!''

''அத்தியட்சக! சாபத்துக்குத் தேவையில்லை; வெளியில் யாருக்கும் சொல்வதில்லையென்று வாக்குக் கொடுத்து விட்டுத்தான் இங்கே என் நண்பர்களையும் அழைத்துக் கொண்டு வந்தேன். கொடுத்த வாக்கை ஒரு நாளும் மீறமாட்டேன்'' என்றார் பொன்னியின் செல்வர்.

ரை நாழிகை நேரத்துக்குப் பிறகு இளவரசர் அருள்மொழிவர்மரும் ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் அநுராதபுரத்தின் வீதியில் நிலா வெளிச்சத்தில் நடந்து கொண்டிருந்தார்கள். விஹாரத்துக்குள் இருந்த வரையில் வாயைக் கெட்டியாக மூடி வைத்துக் கொண்டிருந்த வந்தியத்தேவன் இப்போது அடக்கி வைத்திருந்த எண்ணங்களையெல்லாம் அவிழ்த்து விட்டான்.

''சோழநாடு நீர் வளம் நில வளம் பொருந்தியதுதான். ஆனாலும் இந்த இலங்கைக்கு இணையாகாது. இப்படிப்பட்ட இரத்தினத் தீவின் சிம்மாசனம் வலிய வந்ததை உதைத்துத் தள்ளிவிட்டீர்களே? இது என்ன பேதைமை? தங்களை அழைத்து மணிமகுடத்தை வழங்க வந்த பிக்ஷுக்களின் மதியை என்னவென்று சொல்ல? அடுத்தாற்போல் நானும் தூணோடு தூணாக நின்று கொண்டிருந்தேனே? எனக்குக் கொடுத்திருக்கக் கூடாதா?'' என்று இப்படியெல்லாம் பொருமிக் கொண்டிருந்தான்.

இளவரசர் அவனைச் சமாதானப் படுத்த முயன்றார். ''துஷ்டகமனுவின் மகன் ஸாலி அசோகமாலா என்னும் பெண்ணின் காதலுக்காக இந்த இலங்கை ராஜ்யத்தைத் துறந்தானென்று சொன்னேனே? அது உமது காதில் ஏறவில்லையா?'' என்றார்.

''எல்லாம் ஏறிற்று. அப்படித் தாங்கள் எந்தப் பெண்ணைக் காதலிக்கிறீர்கள்? அவ்விதம் தாங்கள் சிம்மாசனம் ஏறுவதற்குக் குறுக்கே நிற்கும் பெண் யார்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''ஒரு பெண் அல்ல; இரண்டு பெண்கள். சத்தியம், தர்மம் என்னும் இரு பெண்களை நான் காதலிக்கிறேன். அவர்களுக்காகவே இலங்கை மணிமகுடத்தை வேண்டாம் என்றேன்.''

''இளவரசே! தங்களைப் பார்த்தால் இளம்பிராயத்தினராகக் காணப்படுகிறது. பேச்சோ, வயதான கிழ

விட எடுத்துக் காட்டாக, தாங்களே இருப்பதுதான் அதிக சக்தி வாய்ந்தது.

கோர்ட்டுகள் அதிகமாகின்றன என்ருல் குற்றங்கள் அதிகமாகின்றன என்றே அர்த்தம். இதற்குப் பதில் கோயில்கள் அதிகமாளுல் எங்கும் சாந்தம் பரவும். பழைய கால ராஜாக்கள் கோர்ட்டுக்களுக்குப் பதிலாகக் கோயில்களைக் கட்டி வந்தார்கள். பழைய கோயில்களைப் புதுப்பித்தார்கள். அந்தக் கோயில்களிலேயே பொழுது போக்குக்கான சகல கலைகளும் கூடத் தெய்விகமாக்கப்பட்டு அர்ப்பணமாயின. ஜனங்களும் ஆலய வழிபாடு செய்து சாந்தர்களாக இருந்தார்கள். இப்போதுள்ளது போலச் சமூகச் சச்சரவு, பூசல் எல்லாம் அப்போது இல்லை.

சட்டம் போட்டுக் குற்றம் செய்யாமல் தடுப்பதைவிட ஒரு நல்ல மார்க்கத்தைக் காட்டி அதில் ஜனங்களைத் திருப்பித் தப்பை எண்ணவும் செய்யவும் அவகாசத்தைக் குறைக்க வேண்டும். இப்படி தண்டத்தைக் காட்டாமல், நல்லதைக் காட்டித் தேசத்தில் சாந்தியை உண்டாக்குவதுதான் சிலாக்கியம். இந்தச் சாந்திதான் நிலைத்து நிற்கும். சாந்தர்களுக்கும், ஸத்துக்களுக்கும், தர்மிஷ்டர்களுக்கும் ராஜாங்கம் மதிப்புத் தந்தாலே தேசத்திலும் ஜனங்களிடையே இந்த நல்ல பண்புகள் விருத்தியாகும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

வரைப் போல் பேசுகிறீர்கள்.''

''நம்மில் யார் வயதானவர், யாருடைய பிராயம் முடியப் போகிறது என்பது யாருக்குத் தெரியும்?''

இப்படி அவர்கள் பேசிய போது வீதியின் ஓரமாக ஒரு பழைய மாளிகையின் சமீபம் போய்க் கொண்டிருந்தார்கள்.

வீதிக்கு எதிர்ப்புறத்தில் யாரோ கையைத் தட்டும் சப்தம் கேட்டது.

சப்தம் கேட்ட இடத்தில் ஓர் உருவம் நின்று கொண்டிருந்தது.

''இப்படி வாருங்கள்!'' என்று கூறி, இளவரசர் அந்த உருவத்தை நோக்கி வீதியைக் கடந்து போனுர்.

மற்றவர்களும்தொடர்ந்துபோனுர்கள்.

அவர்கள் பாதி வீதியைக் கடந்து கொண்டிருந்தபோது பின்னுல் பெரிய தடபுடல் சப்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தார்கள். அவர்கள் எந்த வீட்டின் ஓரமாகப் போய்க் கொண்டிருந்தார்களோ அதன் மேல் மாடத்தின் முகப்பு இடிந்து விழுந்து கொண்டிருந்தது!

அவர்கள் அங்கே வீதியைக் கடக்கத் திரும்பியிராவிட்டால் அவர்கள் தலை மேலே விழுந்து கொன்றிருக்கும்!

ஒருகண நேர வித்தியாசத்தில் மூன்று உயிர்கள் பிழைத்தன! அதுவும் எப்பேர்ப்பட்ட உயிர்கள்!

''நம்மில் யாருக்குப் பிராயம் முடியப் போகிறது என்று யாருக்குத் தெரியும்?'' என்று பொன்னியின் செல்வர் கூறியது எவ்வளவு உண்மையான வார்த்தை?

இப்படி எண்ணி வந்தியத்தேவன் நடு வீதியில் நின்று பார்த்துக் கொண்டிருக்க, இருவரும் அப்பால் சென்ருர்கள்.,

வந்தியத்தேவன் அவர்களை மறுபடி அணுகியபோது அங்கே நின்ற உருவம் நிலா வெளிச்சத்தில் நன்கு தெரிந்தது.

கண் முன்னே காண்பதை நம்புவதா, இல்லையா என்ற சந்தேகம் அச்சமயம் அவனுக்கு உண்டாயிற்று.

இது என்ன பைத்தியக்காரத்தனம்? இது எப்படிச் சாத்தியமாகும்?

தஞ்சையில் பழுவேட்டரையர் அரண்மனையில் பார்த்த நந்தினி இங்கே இந்த அநுராதபுரத்து வீதிக்கு எப்படி வந்திருக்க முடியும்? நள்ளிரவில் இங்கே வந்து எதற்காக நிற்க வேண்டும்! மறுகணம் அந்த உருவம் மாயமாய் மறைந்தது. மற்ற இருவர் மட்டும் நின்ருர்கள்.

(தொடரும்)

# அவன்

இருக் கதவுக்கு உள்ளே இருளில் நாற்காலிபோட்டு நான் அவனுக்காகக் காத்திருக்கிறேன். நாம் மற்றவர்களைப் பார்த்தாலும், மற்றவர்களால் நம்மைப் பார்க்க முடியாத வசதி இருளில் இருப்பவருக்கு உண்டில்லையா? மூன்று நாட்களாய்ச் சிந்தித்த பிறகுதான் இந்தப் பிரத்தியேக ஏற்பாடு.

மூன்று நாட்களாய், எவ்வளவோ மண்டையை உடைத்தும் எளிதில் அனுமானிக்க



முடியாததாய் அந்த விஷயம் என்னைக் குழப்புகிறது.

என் பிரம்மச்சரியத்தை அழுக்கடிச் சென்டிப் பார்க்கும் எதிர்வீட்டு லலிதாவும் இல்லையென்று மறுத்துவிட்டாள். பிறகு என் வீட்டுத் தெரு வாசலில், அம்மா ஊரில் இல்லாத அந்த மூன்று நாட்களாய் அழகாகக் கோலம் போட்டு வைக்கும் அந்தக் கரத்திற்குச் சொந்தக்காரி யாராயிருக்கும்?

அதைக் கண்டுபிடிக்கத்தான் அலாரம் வைத்து, அதிகாலையில் விழித்துத் திட்டம் போட்டு, நான் அவளுக்காகக் காத்திருக்கிறேன்.

என் மனத்தின் எதிரொலிப்பாய்த் தெரு முனையில் ஒரு நாய் அழுது ஓய்ந்தது. நாய் அழுதால் கெட்டது நடக்குமோ? என்றுமில்லாமல் என் மனம் ஏன் சகுனம் பார்க்கிறது?

என்னைக் குழப்பித் தவிக்கவிட்ட 'அவள்' சரியாய் அரைமணி கழித்துத் தெரு வாசலுக்கு வந்துவிட்டாள். ஒரு கையில் கோலப் பொடி டப்பாவோடும், மறு கையில் நீர் சுமந்த வாளியோடும் 'சுற்றும்' முற்றும் பார்த்து யாருமில்லையென்று தீர்மானித்து நீர் தெளிக்கத் தலைப்படுகிறாள்.

அந்த முகத்தைப் பார்த்ததும் எனக்குள் கோடி மின்னல் சீறிப் பாய்கிறது. ரோமக் கால்கள் சிலிர்க்கின்றன. அவளேதானா?

ஆம்; அவள் பாகீரதியேதான்!

வாசல் கதவைத் திறந்து நான் வெளிப்படுவதற்குள் வாளியைக் கூட எடுக்காமல் ஓடிய அவள், தெரு முனையில் ஒரு வீட்டில் நுழைவதைப் பார்க்கிறேன்.

என் உடம்புச் சிலிர்ப்பு இன்னும் அடங்கவில்லை. ஐந்து வருடங்கள் கழித்து பாகீரதியை, இங்கே இந்த அதிகாலையில் சந்திப்பேன் என்று கனவிலும் கருதியதில்லை. மனிதப் புள்ளிகளை எங்கெங்கோ வைக்கிற இறைவன் இப்படித்தான் சிக்கலாய் ஒரு கோலம் போட்டு முடிக்கிறான்.

விரக்தியால் விண்டு போயிருந்த மனத்தில் பசுமையாய் ஒரு தளிர் தலை நீட்டிப் பார்க்கிறது!

"இலட்சியக் காதலர்களாய் நாம் இருப்போம்னு நெனச்சேன் பாகீ... லட்சியம் இப்போ காற்றில் பறக்குது... இந்தச் சமுதாயத்தை — உன் அப்பாவைப் பகைச்சுக்கிட்டு உன் கழுத்தில் தாலி கட்டற துணிச்சல் எனக்கில்லை பாகீ... அருகதையுமில்லை. நானே அடுத்த வேளைச் சோற்றுக்கு அம்மாவோட கையைத்தான் எதிர்பார்க்கிறேன். நான் வாங்கிய பட்டமும் என் லட்சியத்தோடு சேர்ந்து காற்றில் பறக்குது... இந்தக் கையாலாகாதவனை நீ காதலிச்சிருக்கவே கூடாது பாகீ!"

"நம்ம கடைசி சந்திப்பிலும் ஏன் இப்படி விரக்தியாகவே பேசறீங்க...? நல்லதா நாலு வார்த்தை சொல்லுங்களேன்!"

"எங்கிருந்தாலும் நீ நீடூழி வாழணும்மா!"

"அவ்வளவுதானா?"

"இப்போதைக்கு என்னால முடிஞ்சது இவ்வளவுதான் பாகீ... இனிமே ஆண்டவன் கிட்டே ரெண்டே ரெண்டு கோரிக்கைகளைத்தான் சத்தியமா வைக்கப் போறேன்... எங்கிருந்தாலும் என் பாகீரதிக்குச் சந்தோஷமான வாழ்க்கையைக் கொடு... அடுத்த ஜன்மத்திலாவது எங்க ரெண்டு பேரையும் சேர்த்துவிடு!"

அடுத்த ஜன்மத்திலாவது சந்திக்க முடியுமா என்று நினைத்திருந்த பாகீரதியை, ஐந்தே வருடங்களில் மீண்டும் சந்திப்பேன் என்று நான் ஒருபோதும் நினைத்ததில்லை.

**பட்டுக்கோட்டை ராஜா**



"உன்ன போயிட்டு வர்றதுக்குள்ள உங்க தலை இப்படிப் புடைச்சிருந்தே...?"

"உங்களுக்குக் காப்பி சொல்லிட்டு வரப் போனேனா, என் மனைவி கையில இருந்த அப்பளக் குழவியிலே தவறிப் போய் இடிச்சுக்கிட்டேன்!"

— தி. ராஜாராம்.





பியூன்: "ரூலிங் பார்ட்டி எம். எல். ஏ. ருத்ரசாகரனின் சித்தப்பாவின் மைத்துனன் ஸார், நான்!"

மானேஜர்: "'என்யா வேட்டு'ன்னு நான் கேட்கிறபோதெல்லாம் நீ இந்த டயலாக்கைப் பேசறது கொஞ்சம் கூட நல்லா இல்லே!"

— உ. ராஜாஜி.

இந்த ஐந்து வருடங்களில்தான் எத்தனை மாற்றங்கள்.

குருடனுக்குப் பார்வை தந்ததுபோல், இந்த அரசாங்கம் எனக்கொரு வேலை தந்து, உத்தியோகஸ்தனாய் அங்கீகரித்தது. காலம் கடந்த இந்த அங்கீகரிப்பில் சத்தியமாய் எனக்கு மகிழ்ச்சியில்லை. இல்லையேல் பாகீரதி எனக்குக் கிடைக்காமல் போயிருப்பாளா?

பல இடங்களில் எனக்குச் சம்பந்தம் பேசிப் பேசி அலுத்துவிட்ட என் அம்மா, தன் வயோதிகத்தை வேண்டா வெறுப்பாய்க் கழித்து வந்தாலும், எப்படியும் ஓர் ஏற்பாடு செய்துவிடுவதென்ற முடிவோடு இப்போது தன் சொந்தக் கிராமத்திற்குப் பயணம் சென்றிருந்தாள்.

தலைக்கேறிய குழப்பத்தில் தகித்திட்ட என்னால் அடுத்த நாள் அலுவலகப் பணிகளில் செவ்வனே ஈடுபட முடியவில்லை.

மாலை வரக் காத்திருந்து, மறுநாள் காலை வரக் காத்திருந்து, வாசலுக்குப் பாகீரதி வரக் காத்திருந்தேன்.

என் காத்திருத்தல் விரயமாக — வெறுப்போடு வெளிப்பட்ட என் பார்வையில், தன் வீட்டு வாசலில் கோலம் போட்டுக் கொண்டிருந்த பாகீரதி தெரிந்தாள்!

கதவைத் தாழிட்டுவிட்டு, விடுவிடுவென அவளை நோக்கி நடந்தேன்.

குனிந்திருந்த அவள் கண்களில் என் பாதம் தென்பட்டதும் 'படக்'கென நிமிர்ந்தாள்.

அந்த நிலவின் நெற்றி வெற்று வானமாய் வெறிச்சோடிக் கிடந்ததைப் பார்த்ததும் என்னை ஆயிரம் தேள்கள் ஒன்று சேர்ந்து கொட்டின.

அவசரமாய் உள்ளே நுழையப் போனவளைக் கைநீட்டி நிறுத்தினேன்.

"பாகீரதி, இத்தனை வருஷம் கழித்து உன்னை நான் இந்தக் கோலத்திலா சந்திக்கணும்?"

"இது விதி வரைந்த கோலம்!"

"உன் கணவருக்கு என்னாச்சு... உன்னோட அப்பா?"

"குடிகாரனுக்குப் பெண்ணைக் கொடுத்திட்டோமேங்கிற வருத்தத்தில் எங்க அப்பா சீக்கிரமே கண்ணை மூடிட்டாரு... எனக்கொரு பெண்ணைக் கொடுத்திட்டு, அந்தக் குடிகாரரும் கண்ணை மூடிட்டாரு!"

"பாகீரதி, நீ எங்கே இப்படி?"

"என் கணவர் இறந்ததும், அவர் பார்த்துக்கிட்டிருந்த வேலையை அரசாங்கம் எனக்குக் கொடுத்திடுச்சு... உள்ளூரில் இருக்கப் பிடிக்காமல் நான் இந்த ஊருக்கு மாற்றல் கேட்டுக்கிட்டு வந்தேன்... இப்போ எனக்கும், என் குழந்தைக்கும் வயிற்றுப் பாட்டுக்கு அந்த வேலைதான் வழி செய்யுது.... ஆனால், உங்களை இங்கே சந்திப்பேன்னு நெனைக்கவே இல்லை... உங்களைப் பார்த்த அன்னிக்கு நான் எப்படிப் பரவசப்பட்டேன் தெரியுமா...? அதுசரி, நீங்க ஏன் கல்யாணமே பண்ணிக்கலை?"

"அது போகட்டும் பாகி, எங்க வீட்டு வாசல்லே நீ எதுக்காகக் கோலம் போட்டே?"

"சமீபத்தில் பேப்பரில் ஒரு செய்தி படிச்சேன்... 'சரியா ஒரு வீட்டில் ஆள் இல்லேன்னு தெரிஞ்சு எப்படிடா அந்த வீட்டுப் பூட்டை உடைச்சே'ன்னு ஒரு திருடனைப் போலீசார் விசாரிச்சதுக்கு அவன் என்ன பதில் சொல்லியிருக்கான் தெரியுமா...? 'எந்த வீட்டு வாசலில் தொடர்ந்து சாணம் தெளிச்சுக் கோலம் போடலியோ அந்த வீட்டில் ஆள் இல்லேன்னு கண்டுபிடிச்சுச் சுலபமா உள்ளே நுழைஞ்சிடுவேன்'னு சொல்லியிருந்தான்!"

"ஓஹோ, திருடன் எங்க வீட்டிலும் நுழைஞ்சிடுவானேங்கிற கரிசனமா...? அப்படியே நுழைஞ்சாலும் அங்கே திருடறதுக்கு எதுவுமில்லே பாகி... என் இதயம் கூட ஏற்கெனவே திருடு போயிடுச்சு... இப்போ நான் வெற்று மனிதன்தான்!" என்ற நான் சட்டெனத் திரும்பி விடுவிடுவென வீட்டை நோக்கி நடந்தேன்.

தவறுதலாகப் பேசிவிட்டோமோ என்கிற ஒரு குற்ற உணர்வு மட்டும் அன்றிரவு முழுக்க என் உள் மனத்தை அரித்துக்

## வாசகர் பங்கு



# தளபதி திடமதி

## பரிசு ரூ. 400/-

நமது ஆஸ்தான ஜோக்கர் தளபதி திடமதியின் அறிவுக் கொழுந்தான கருத்துக்களைப் படித்துக் குபீரென்று சிரித்தவர்கள் அதே பாணியில் அரசியல் — சமுதாய நிகழ்ச்சிகளை அல்லது பிரச்னைகளைத் தொடர்புபடுத்திக் கீழே உள்ள கூப்பனில் எழுதி விலாசம் பூர்த்தி செய்து அனுப்பலாம். பிரசுரமாகும் துணுக்கு ஒவ்வொன்றும் ரூ. 25 பரிசு பெறும். தவிர, ஒருவரே எழுதிய துணுக்குகள் சில அடுத்த பல இதழ்களில் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் அவருக்குச் சன்மானம் இரட்டிப்பாகும். இவ்விதம் அதிகபட்சமாக ஒரு துணுக்கு ரூ. 400 வரை பரிசு பெற வாய்ப்புண்டு. உறையின் மேல் "தளபதி திடமதி" என்று மறக்காமல் குறிப்பிடவும்.

கூப்பன்:

கல்கி இதழ் 13.12.87 — முடிவு தேதி: 22.12.87.

தளபதி திடமதி: "..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

கொண்டே இருக்க, உறக்கம் பறிபோனது!

அடுத்த நாள் மாலை நான் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிய போது அம்மா கிராமத்திலிருந்து வந்திருந்தாள்.

என் இதயத்தில் தோன்றியிருந்த புதிய உணர்வலைகள் என்னை மௌனியாக்கிவிட, ஏனோ அம்மாவும் என்னிடம் எதுவுமே பேசாதிருந்தாள்.

நான் முகம் கழுவிவிட்டு ஹாலுக்குள் நுழைந்தபோது, காப்பி கூட மௌனமாய் வந்து மேசை மீது 'டொக்'கென்று உட்கார்ந்தது.

வார்த்தைகளைவிட மௌனத்திற்கு அதிக வலிமையில்லையா? அம்மாவின் மனநிலையை என்னால் அனுமானிக்க முடியவில்லை.

அவளும் என்னதான் செய்வாள் பாவம்? இளமை மாறாத வயதிலேயே அந்த வீணையின் தந்திகள் அறுபட்டுப் போய்விட்டன. திருநீற்றை மட்டுமே நெற்றிக்குச் சொந்தமாக்கிவிட்டு என் தந்தை 'மேல் பதவி' அடைந்தபின், உணர்ச்சிகளையெல்லாம் கொன்று போட்டுவிட்டு, என்னைப் படிக்க வைப்பதற்கென்றே உழன்று சிதைந்தது அந்த வீணை. வயதான காலத்தில் பேரக் குழந்தைகளின் மழலை நாதமாவது ஒலிக்காதா என்று அந்த வீணை இப்போது ஏங்கித் துடிப்பது இயற்கைதானே?

"என்னம்மா, கிராமத்துல எதுவும் விசேஷமில்லையா?" — நானே மௌனத்தைத் துரத்தினேன்.

"இந்த முண்டச்சியால என்னப்பா விசேஷம் சொல்ல முடியும்?" — பதில் பாகலாய் வெளிப்பட்டது.

கொஞ்ச நேரத்தை மௌனத்திடம் அர்ப்பணித்து மீண்டும் தொடர்ந்தேன்.

"ஏம்மா, கொல்லைப்புறத்துல கவனிச்சியா...? பாகல் கொடி படர நீ நட்டிருந்த கொம்பு நேற்று அடிச்ச காற்றில் திடீர்னு முறிஞ்சு போச்சு... அப்புறம் நானே வேறு கொம்பு நட்டுக் கொடியைப் படர விட்டேன்!"

"பார்த்தேம்ப்பா!" — ஒரு வார்த்தைப் பதில்தான் என்றாலும் அதில் ஓராயிரம் அர்த்தம் தொனித்தது.

"இன்னொண்ணு கவனிச்சியாம்மா... நம்ம வீட்டு உத்தரத்தில் கூடு கட்டியிருந்த குருவிக் குடும்பத்துல ஆண் குருவி ஸீலிங் ஃபேனில் அடிபட்டுச் செத்துப் போயிடுச்சில்லே...? இப்போ வேறொரு ஆண் குருவி அந்தக் கூட்டில் வந்து அடையுதும்மா... பழைய குஞ்சுகளுக்கு இரையெல்லாம் கூட இதுவே தருது!"

"உன் மனசு எனக்குப் புரியுதுப்பா... அதே மாதிரி வேதனைகளை நானும் அனுபவிச்சவ இல்லையா...? கவலைப்படாதே. கூடிய சீக்கிரம் உங்க ரெண்டு பேரையும் சேர்த்து வைக்கிறேன்... நான் கிராமத்துக்குப் போனதே உங்களுக்குள்ளே சந்திப்பு நிகழணும்ங்கிறதுக்காகத்தாம்ப்பா!"

அம்மா சொன்ன போது, மகிழ்ச்சியால் மௌனமாகிப் போனேன் நான்.




டோபூ சைக்கிள் ஓட்டிய பருவத்திலிருந்து, உங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவருவதை கவனியுங்கள். இரண்டு வயது குழந்தைகளுக்கான மூன்று சக்கர சைக்கிளில் துவங்கி உங்களின் எட்டு வயது பையன், உறுதியான பைசைக்கிள்களில் சுற்றி வருவதைக் கண்டு மகிழலாம். அக்குழந்தைகளுக்கு, பாலன்ஸ் செய்யவும், கன்ட்ரோல் செய்யவும் கற்றுத் தரும் சைக்கிள்கள்,அத்துடன் அவர்களுக்கு நல்ல நம்பிக்கையையும் ஏற்படுத்துகின்றன.

விரிவான பலதரப்பட்ட வண்ணங்களிலும் டிசைன்களிலும் கிடைக்கும், இந்த குரோம் பெயிண்ட் பூசப்பட்ட நேர்த்தியான சைக்கிள்கள், எஃகு மற்றும் முறிந்துபோகாத உறுதி வாய்ந்த பாலிமெர்களால் தயாரிக்கப்பட்டவை. அதுமட்டுமல்ல ; கடுத்தமான தரக்கட்டுப்பாட்டின் கீழ் தயாரிக்கப்பட்டவை. ஏனெனில், குழந்தைகள் விஷயத்தில் நாங்கள் எதையும் விட்டுக்கொடுப்பதில்லை.

**Tobu®**

*குழந்தைகள் ஓட்டி மகிழும் சைக்கிள்கள்.*

**டோபூ என்டர்பிரைசஸ் பிரைவேட் லிமிடெட்,**
8/29,கீர்த்தி நகர் இண்டஸ்ட்ரியல் ஏரியா, நியூதில்லி - 110015

# 20

"க்ளைமாக்ஸ் எல்லாம் முடிஞ்சுது. நாங்க கிளம்பறோம்" என்றான் மாதவன் நாயர்.

"கார்ட் ஆஃப் ஹானர் பார்க்க வரலையா?" என்றான் பிரபு.

"அது எதுக்கு, போர்! ஒப்பந்தம் கையெழுத்திடறதைப் பத்தி எழுதத்தான் நாம கொழும்புக்கு அழைச்சு வரப்பட்டோம். அது முடிஞ்சு போச்சு. இனிமே நமக்கென்ன வேலை?"

"பலத்த செக்யூரிட்டி வேறே. கூட்டம் போடக் கூடாதுன்னு உத்தரவு. பிளேன் காத்துக் கொண்டிருக்கு. ஜர்னலிஸ்ட்களுக்காக," என்றான் திலீப் பட்நாகர்.

"நீ வரல்லியா பிரபு?"

"இல்லே, எனக்கு இங்கே ரெண்டு மாசம் போஸ்டிங்!"

"குட்! நீயாவது ஏதாவது உருப்படியா எழுது. இனிமேல்தான் இங்கே கதை ஆரம்பம்."

எல்லாப் பத்திரிகைக்காரர்களும் கூட்டமாக நகர்ந்ததும் பிரபு இந்தியப் பிரதமரின் கடைசி நிகழ்ச்சியைப் பார்க்க விரைந்தான். இலங்கை ஜனாதிபதியின் அலுவலக இல்லத்தின் எதிர்த்தாற்போல் இருந்த 'ஜனாதிபதி மாவத்தில் கார்ட் ஆஃப் ஹானர்' நிகழ்ச்சிக்கு ஏற்பாடாகியிருந்தது.

இத்தனை குறுகிய வீதியில் எப்படி இதற்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்று பிரபு வியந்தான்.

பிரதமரின் இளம் உருவம் மிடுக்குடன் இலங்கைக் கடற்படை அணியின் முன் நகர்ந்தது.

திடீரென்று ஒரு வீரனின் துப்பாக்கியின் தலைகீழ்ப் பாகம் பிரதமரின் தலைப்பக்கமாய் நகர்ந்தது. அதிசய வேகத்துடன் பிரதமர் தலையைக் குனிந்து நகர்ந்தார். அடி தோள் பட்டையில் விழுந்தது. எல்லாம் கண்ணிமைக்கும் நேரத்தில். கூட்டத்துடன் பிரபு அதிர்ந்து நின்றான். உடனடியாகப் போலீஸ் அந்த ஆளைப் பிடித்துக் கொண்டு நகர்ந்தது. சுற்றிலும் ஒரு விக்கித்த உணர்வு வெகு நேரம் வரை வியாபித்தது. 'நல்லவேளை, உயிருக்கு ஒன்றும் ஆகவில்லை' என்கிற நிம்மதி இரண்டு பக்கமும் தெளிவாகத் தெரிந்தது. இத்தனை அமளிக்குப் பிறகும் இந்தியக் குழு அதிகத் தாமதமில்லாமல் கிளம்பிச் சென்ற அதிசயத்தை நினைத்தபடி பிரபு நடந்தான்.

'இன்றைக்குப் பெரிய கண்டம்' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டான். இந்த உடன்படிக்கைக்குச் சிங்களவரின் தரப்பிலிருந்து கிளம்பிய முதல் எதிர்ப்புக் குரல். இதற்குப் பின்னால் யார் வேண்டுமானாலும் இருக்கலாம். இந்தச் சமாதானத்துக்கு முறிவு ஏற்படுவதில் ஆர்வம் கொண்டுள்ள உள்நாட்டு, வெளிநாட்டு எதிர்ப்புச் சக்திகள் அநேகம்.

அவன் பஸ் பிடிக்கக் கடற்கரைச் சாலையான 'கால்' வீதிக்கு வந்தான்.



# நிற்க நிழல் வேண்டும்

வாஸந்தி

பஸ் நிலையத்தில் நின்றிருந்தவர்கள் அநேகமாய்ச் சிங்களவர்கள் போல் இருந்தார்கள். நாலைந்து இளைஞர்கள் காரசாரமாய்ச் சிங்களத்தில் விவாதித்துக் கொண்டிருந்தார்கள். சற்றுமுன் நடந்த விஷயத்தைப் பற்றி இருக்க வேண்டும் என்று அவன் கடலை வேடிக்கை பார்த்தபடி நின்றான்.

அந்த இளைஞர்கள் ஆங்கிலத்தில் படபடக்க ஆரம்பித்தார்கள்.

''இலங்கையை இந்தியாவுக்கு விற்றுவிட்டார் கிழவர்! இதை எந்தச் சிங்களவன் பொறுப்பான்?''

நல்லவேளையாக அவன் ஏற வேண்டிய பஸ் வந்துவிட்டது. அவன் அவசரமாக ஏறி அமர்ந்தான். இன்று இங்கு கலகம் ஏற்பட்டாலும் ஏற்படலாம் என்று தோன்றிற்று.

அவன் புல்லர்ஸ் ரோட்டில் இறங்கி நீள நடந்தான். மரங்களடர்ந்த இந்தப் பசுமையான அழகிய தெருக்களில் இனத்துவேஷம் தலையெடுக்கும் என்று கற்பனை செய்து கூடப் பார்க்க முடியவில்லை. நாற்சந்தியைப் பார்த்த ஒரு மூலையில் புத்தரின் சிலை அமைதியாய்க வீற்றிருந்தது. இலங்கையின் வடக்குப் புறத்தில் நடக்கும் விஷயங்கள் இவருக்குத் தெரியுமா என்ற யோசனையுடன் அவன் சாந்தி விஹாருக்குள் நுழைந்தான். இங்குதான் இந்தியச் சாப்பாடு கிடைக்கும். வயிற்றை நிரப்பிக் கொண்டு போவது நல்லது என்று உள்ளே சென்று இட்லிக்கும் வடைக்கும் சொல்லிவிட்டு அமர்ந்தான்.

''ஐயா தமிழ் பேசறவங்களா?'' என்றான் ஓர் இளம் சர்வர், இட்டிலித் தட்டை நகர்த்தியபடி. ''இந்தியரா?''

''ஆமாம்'' என்று பிரபு புன்னகை செய்தான். ''உனக்கு எந்தப் பக்கம்?''

''நான் மலையகத் தமிழன் ஐயா. கண்டிக்குப் பக்கத்திலே. தாத்தா, தோட்டத்து வேலை செய்ய இந்தியாவிலேர்ந்து வந்தவர். இன்னிக்கு நடந்த அநியாயத்தைப் பார்த்தீங்களா ஐயா! இந்தியப் பிரதமரைக் கொல்ல முயன்றதைச் சொல்றேன். எப்படிப்பட்ட வெட்கப்பட வேண்டிய செயல்!''

பிரபு அவனைச் சுவாரஸ்யத்துடன் பார்த்தான். இருபத்தி ஐந்து வயதுக்குள் இருக்கும். தனக்கே ஏற்பட்ட அவமானம் போல் குரலிலும் பார்வையிலும் வருத்தம் தொனித்தது. சுபாவமான கரிசனமா அல்லது இவனுக்கே தெரியாத வேர்களின் ஈர்ப்பா என்று புரியவில்லை.

''ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு மாதிரியான கோபம் இருக்கலாம்.''

''அதுக்காக இப்படியா? எத்தனை பெரிய நாடு இந்தியா! விருந்தாளியா வந்தவங்களை இப்படிச் செய்யலாமா?''

பிரபு பதில் ஏதும் சொல்லாமல் சாப்பிடுவதைத் தொடர்ந்தான்.

''உன் பேரென்ன?''

''கண்ணன்.''

''இந்தியா போயிருக்கியா?''

''இல்லீங்க. போகணும் என்டு ஆசையும் இல்லீங்க.''

''ஏம்ப்பா?''

''எங்க சொந்தக்காரங்க பிரஜா உரிமை இல்லாததாலே இந்தியாவுக்கு அனுப்பப்பட்டாங்க. அங்கே ரொம்பக் கஷ்டப்படறதாக் கடிதம் வருதுங்க. இந்தியாவிலே வாழ்க்கை வசதி பத்தாதுங்க.

''இங்கே நல்லா இருக்கா?''

''இங்கே சாப்பாட்டுக்குக் கஷ்டமில்லீங்க. இருக்க இடம் இருக்கு. படிப்பு வசதி இருக்கு. தொண்டைமான் தெரியுமா ஐயா, எங்க மந்திரி, அவர் இருக்கிற வரை ஒண்ணும் குறையில்லீங்க.

''வேடிக்கையா இருக்கு கண்ணன். இனக் கலவரத்தின் போதெல்லாம் நீங்களும் தாக்கப்பட்டிருக்கீங்க. பாதிப் பேருக்கு மேல் பிரஜா உரிமை போயிட்டது.''

''அதெல்லாம் உண்மைதாங்க. அதெல்லாம் யாழ்ப்பாணத் தமிழர்களுடைய திமிராலே வந்த வினைங்க. பிரஜா உரிமை பறிக்கப்பட்டப்ப எங்களுக்காக அவங்க யாரும் பேசல்லே. அவங்களுக்கு எங்களைக் கண்டா எப்பவும் இளப்பம், கீழ்ச்சாதி என்டு. அவங்க தனி நாடு கேட்டா அதிலே எங்க பங்கோ லாபமோ ஒண்ணுமில்லே. தங்களுக்குப் பலம் சேர்க்கணும்னு எங்களுக்காகக் கவலைப்படறவங்க போலக் கதைக்கறாங்க. அவங்களோடு சேர்ந்தா இப்ப அரசாங்கத்திலே கிடைக்கிற சலுகைகள் கூடக் கிடைக்காது.''

''நீ படிச்சிருக்கியா?''

''அஞ்சாங்கிளாஸ் வரை படிச்சேன்ங்க.

அப்புறம் படிப்பு ஏறல்லே. தோட்ட வேலை செய்யவும் பிடிக்கல்லே. இங்கே வந்துட்டேன்.''

பிரபு அவனை யோசனையுடன் பார்த்தான். ''உங்களுக்கெல்லாம் அப்ப குறைன்னு சொல்லும்படியா ஒண்ணும் இல்லேங்கறே?''

''குறையின்டா, இருக்கும்தான். அதைக் கவனிக்க எங்க தலைவர் இருக்கார். எங்களைக் கேவலமா நினைக்கிறவங்களோடு சேர எங்களுக்கு விருப்பமில்லீங்க.''

''இனக்கலவரத்தின்போது, யாழ்ப்பாணத் தமிழன், மலையகத் தமிழன்னு எங்கே வித்தியாசம் பார்க்கிறாங்க? நீங்களும்தானே அடிபட்டீங்க?''

''அதுக்கும் அவங்கதாங்க காரணம். அவங்க மேல் இருக்கிற கோபத்தை எங்க மேல கலகக்காரங்க காண்பிச்சாங்க. சமாதானம் வந்தால் எங்களுக்கு நல்லது. நிம்மதியா இருப்போம்.''

பிரபுவின் கவனம் கலைந்தது. புடைவை அணிந்த ஒரு பெண் பரபரவென்று உள்ளே நுழைந்தாள். கரிய விழிகள் காலி இடத்தைத் தேடிப் பிடித்ததும், கண்ணனுக்குச் சைகை காட்டி அழைத்தாள். அவள் கொடுத்த ஆர்டரை வாங்கிக் கொண்டு கண்ணன் உள்ளே விரைந்தான்.

அந்தப் பெண் சுற்றும் முற்றும் பார்க்காமல் உடனடியாக ஒரு புத்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள்.

அவளிடம் ஓர் அபூர்வமான கவர்ச்சி இருந்தது. பிரபுவை மீண்டும் மீண்டும் பார்க்கத்தூண்டிற்று. இலங்கை ரூபவாஹினியில் அவள் வேலையாயிருக்கலாம் என்று அவன் நினைத்துக் கொண்டான்.



''திருச்சி ''பாய்லர்'' தொழிற்சாலையில், உனக்கு வேண்டியவங்க யாராவது இருக்காங்களா...?''

''என்ன விஷயம்...?''

''டீக்கடை ஒண்ணு போடலாம்னு இருக்கேன். அதுக்கு ''பாய்லர்'' வேணுமில்லே... கொஞ்சம் ரேட் கம்மி பண்ணி வாங்கலாமேன்ற ஆசைதான்!''

— கர்புகுளம் ஜெயாபாரதிப்ரியா.

''இங்கே உட்காரலாமா?'' என்று ஆங்கிலத்தில் குரல் கேட்டு அவன் திரும்பினான். தாடியும் மீசையுமாக ஓர் உயரமான ஆள் அருகில் நின்றிருந்தான்.

பிரபு தலையாட்டியதும் அருகில் அமர்ந்தான். கண்ணனிடம் அவன் பேசும் போது யாழ்ப்பாணத் தமிழன் என்று தோன்றிற்று.

''யாழ்ப்பாணமா?'' என்றான் பிரபு தமிழில்.

''இல்லே, மட்டக்களப்பு. யாழ்ப்பாணத்திலே படிச்சேன்.''

''இங்கே வேலை பார்க்கறீங்களா?''

''இல்லே. சும்மா வந்திருக்கேன். நீங்கள்?''

''இந்தியன் ஜர்னலிஸ்ட்! பிரபு.''

''ஓ, இன்டைக் கூத்தைப் பார்க்க வந்திருப்பீர்!''

''ஏன் கூத்துங்கறீங்க? எல்லாரும் நிம்மதிங்கறாங்க!''

''அஹ்!'' என்றான் அவன் அலட்சியமாக. ''இது வெற்றிபெறும் என்கிற எதிர்பார்ப்பினாலே சொல்லப்பட்ட வார்த்தை அது!''

''ஏன், வெற்றி பெறாதா?''

அவன் உதட்டைப் பிதுக்கினான். ''இன்டைக்கே முதல் எச்சரிக்கை கிடைச்சதே!''

''சிங்களக்காரங்க கிட்டேர்ந்து எதிர்ப்பு எதிர்பார்த்ததுதான்.''

''இதைவிடத் தொந்தரவு தமிழர்கள் கொடுக்கப் போறான்கள்.''

பிரபு சற்று நேரம் பேசாமல் இருந்தான். பிறகு மெள்ளச் சொன்னான்.

''இரண்டு மாசம் முந்தி நான் யாழ்ப்பாணத்திலே இருந்தேன். ராணுவத் தாக்குதலாலே ஜனங்க பட்ட கஷ்டம் சகிக்க முடியல்லே. எப்படியாவது நிம்மதி வராதான்னு அவங்க காத்துக்கிட்டிருக்காங்க, மிஸ்டர்... என்ன பெயர்?''

''ஈசுவரன். அதெல்லாம் சரிதான். ஆனா நிம்மதி வராது.''

''ஏன், ஷரத்துக்கள் திருப்தியில்லாததனாலா? இல்லே அரசு அதை செயல்படுத்தாதுங்கற பயத்தினாலேயா?''

ஈசுவரனின் சிரிப்பில் ஏகத்தாளமா, பரிகாசமா என்று புரியாத ஒன்றிருந்தது.

''இது வெளியிலே சொல்லப்படற காரணங்கள். உண்மைக் காரணம் வேறே...''

அவனே பேசட்டும், என்று பிரபு பேசாமல் இருந்தான். அவனுடைய கண்ணையும் பேச்சையும் பார்க்கும் போது ஜயசீலனின் நினைவு வந்தது. இவனும் அவனைப் போல் ஏமாற்றத்துடன் ஏதாவது போராளிக் கும்பலிலிருந்து வெளியில் வந்தவனோ என்று தோன்றிற்று.

பிரபு அவனுடைய விளக்கத்திற்குக் காத்திருக்கிறான் என்கிற உணர்வே இல்லாதவன் போல் கண்ணன் கொண்டு வந்து வைத்த வடையை அவன் மெல்ல ஆரம்பித்தான்.

பிரபு குழப்பத்துடன் அவனைப் பார்த்தான்.

''அதனாலே?''




# மிருதசஞ்சீவினி மந்திரம்

கோகுலம் ஜனவரி இதழில்

கதை: ஆனந்தி
படம்: வினு

மீண்டும் ஏதோ ஒரு ரகசிய ஹாஸ்யத்துக்காக ஈசுவரன் சிரித்தான்.

"இந்த உடன்படிக்கை வெற்றியடையாம பார்த்துக்குவாங்க போராளிங்க!"

"எத்தனை காலத்துக்கு ஈசுவரன்?" என்றான் பிரபு ஆயாசத்துடன். "போராளிகளை களைச்சுப் போயிட்டாங்கன்னு நான் நினைச்சேன்."

"களைச்சுப் போயிட்டாங்கதான். அதிலே சந்தேகமில்லே. வாளெடுத்தவனுக்கு வாளாலேதான் சாவு எண்டும் அவங்களுக்குத் தெரியும். ஜனநாயகம் வந்தா ஆயுதம் ஏந்த முடியாது. ஒருத்தன் மத்தவனைத் தீர்க்கக் காத்திருக்கான். மிதவாத அரசியல்வாதிகூட ஜனநாயகத்தைக் கண்டு பயப்படுவான்."

"பின்னே இதுக்கு என்னதான் முடிவு?"

ஈசுவரன் கைகளை வேகமாகத் தேய்த்துச் சிரித்தான்.

"ஆ, அது இப்ப ஒரு பெரிய கேள்விக்குறி!"

பிரபு அவனை ஆர்வத்துடன் பார்த்தபடி அமர்ந்திருந்தான்.

"இங்கே நோக்கம் திசை திரும்பிக் கனகாலம் ஆயிட்டது. நாம வளர்த்த பொடியன்கள் நம்ம சொல்படி கேட்பாங்க எண்டு இந்திய அரசு நினைக்கிறது. இது ஃப்ராங்கின்ஸ்டீனை வளர்த்த கதை எண்டு விளங்காம!"

பிரபு பலமாகத் தலையாட்டினான். "இல்லே ஈசுவரன். நீங்க அதிகமாக் கவலைப்படறீங்க. எனக்கு நம்பிக்கை இருக்கு. ஆரம்பத்திலே போராளிகளுக்குக் கஷ்டமாயிருக்கும். பிறகு சரியாயிடும்."

ஈசுவரன் மீண்டும் பரிகாசமாகச் சிரித்தான்.

"உங்களுக்கு என் வாழ்த்துக்கள்."

புதிதாகப் புகுந்த சஞ்சலத்துடன் பிரபு எழுந்தான். ஈசுவரனின் கையைக் குலுக்கி, "மறுபடியும் இங்கே சந்திக்கலாம்" என்று விட்டு வெளியே வந்தான். கை நோட் புக்கைப் பிரித்துத் தான் செல்ல வேண்டிய விஜயபாலசூர்யாவின் விலாசத்தை நினைவுபடுத்திக் கொண்டு ஹாவ்லாக் வீதியில் நடந்தான்.

மரங்களும் பூச்செடிகளும் நிறைந்த ஒரு பெரிய வீட்டின் அழைப்பு மணியை அழுத்தினதும் கல்லூரிப் பேராசிரியர் போல் தோற்றம் கொண்ட ஒருவர் வந்தார். தான்தான் விஜயபாலசூர்ய என்றார்.

அவன் தன் பெயரைச் சொன்னான். மல்ஹோத்ராவின் கடிதத்தைக் காண்பித்தான். அவர் கருணையுடன் புன்னகை செய்து அவன் தோளைப் பற்றி உட்காரச் சொன்னார்.

"சீலியா!" என்று அவர் உள்நோக்கிக் குரல் கொடுத்தார்.

அவன் வியப்புடன் நிமிர்ந்தான். அந்தப் பெண் வந்து நின்றாள் — ஹோட்டலில் பார்த்த அதே பெண்!

(தொடரும்)

# அம்மா

சட்டென விழிப்பு வந்தது உஷாவுக்கு. கண்களைத் திறக்காமலே தன் சின்னக் கைகளால் படுக்கையில் தன் பக்கத்தில் துளாவினாள். படுக்கை காலியாக இருந்தது. அவளுடைய அம்மா உமா எழுந்து போய் விட்டிருந்தாள்.

இது வழக்கம்தான். உஷா கண் விழிக்கும் முன்னரே அம்மா எழுந்து வேலைக்குப் போய் விடுவாள். மாலையிலும் நேரம் கழித்துத்தான் திரும்புவாள். கடமைக்காகக் கன்னத்தில் லேசாக ஒரு தட்டு, உணர்ச்சியில்லாத வறண்ட புன்சிரிப்பு. இவைதான் அம்மாவிடமிருந்து அவளுக்குக் கிடைப்பவை.

மனத்தில் ஒருவித வெறுமை ஏற்பட்டது. வேதனையுடன் கண்களை மூடிக்கொண்டாள். நேற்றுப் பள்ளியில் நடந்த சம்பவம் நினைவிற்கு வந்தது.

உஷாவின் சிநேகிதி ராணி தன் பிறந்த நாள் என்று அவளுக்குப் பர்பி கொடுத்தாள். "எங்கம்மா செய்தது!" என்றாள் கூடவே பெருமையுடன்.

"அம்மா செய்ததா?" என்று வியப்புடன் கேட்டாள் உஷா. ஏனெனில் அவளன்னை உஷா தன் கையால் இப்படி எதுவும் செய்து தந்ததாக அவளுக்கு நினைவே இல்லை.

"ஆமா, எங்கம்மாவுக்கு எல்லாம் செய்யத் தெரியும். இன்னும் உனக்கு வேணுமா?"

இன்னுமொரு துண்டு வேண்டும் போலிருந்தாலும், "வேண்டாம்" என்றாள் உஷா.

உஷாவின் வீட்டில் சமையல் வேலைகளையெல்லாம் வேலைக்காரிதான் செய்வாள். எனவே, அவள் ஆவலுடன் கேட்டாள், "உங்கம்மா வேலைக்குப் போகலையா?"

"எங்க வீட்டிலே அப்பாதான் ஆபீஸ் போறார். அம்மா வீட்டிலேதான் இருப்பாங்க!"

"உன்னைக் காலையிலே யார் குளிப்பாட்டுவா?"

"அம்மாதான். தலை வாருவது, ஊட்டி விடுவது எல்லாம் அம்மாதான். ராத்திரி தெனமும் கதை சொல்லித் தூங்கப் பண்ணுவாங்க. சில சமயம் தம்பிப் பாப்பா அழுவான். அப்ப மட்டும் கதை கிடையாது..." என்ற ராணியின் அம்மா பெருமை இப்பொழுது, இந்த விடிகாலைப் பொழுதில் நினைவிற்கு வந்து நெஞ்சிலே கனத்தது.

கண்களை மூடிக் கொண்டாள் உஷா. அவள் அம்மா ஒரு நாளாவது அவளைக் குளிப்பாட்டியிருப்பாளா? ஒரு தடவையாவது தலைவாரியிருப்பாளா? ஒரு முறையாவது உணவூட்டியிருப்பாளா?

'ஊஹூம்... இந்த அம்மா எப்பவும் பிஸிதான். ஒரே பிஸி. தன் ஒரே பெண்ணைக் கூட கவனித்துப் பேணமுடியாத அளவுக்குப் பிஸி!'

எல்லாம் நினைவிற்கு வந்து உஷாவின் நெஞ்சை அழுத்திற்று.

ஆயா வந்து அவளை எழுப்பினாள். உஷா திரும்பிப் படுக்கையில் பார்த்தாள். அப்பா எழுந்து போய்விட்டிருந்தார்.

இந்த அப்பாவாவது தான் எழும் பொழுது என்னையும் எழுப்பியிருக்கக் கூடாதா! எதற்கெடுத்தாலும் ஆயாதான் வர வேண்டுமா? உணர்ச்சியற்று, கடமையொன்றே தன் லட்சியம் போல் இயங்கும் ஆயாவைக் கண்டாலே உஷாவிற்கு வெறுப்பு. அம்மா பொய்யாகவாவது சிரிக்கிறாள். இந்த ஆயா அப்படிக் கூட சிரிப்பதில்லை.

ஆயா வந்ததும் அதட்டலோடுதான் அவளை எழுப்புவாள். பல் துலக்கி விட்டுக் குளிக்க வரும்படி அவசரப்படுத்துவாள். அதிக நேரம் எடுத்துக் கொண்டால் எரிச்சலுடன் முணுமுணுத்துக்கொண்டே அவளை முரட்டுத்தனமாகப் பிடித்து இழுத்து, உடைகளை அணியச் செய்வாள். இவையெல்லாம் உஷாவிற்கு வெறுப்பையே ஊட்டும். வேண்டுமென்றே இன்னும் தாமதப்படுத்தி அவளை எரிச்சலூட்டுவதில் குரூர திருப்தி உண்டாகும்.

அம்மா இரவில் வீடு திரும்பிய பிறகு, அப்பா, அம்மா, உஷா மூன்று பேரும் ஒன்றாக அமர்ந்துதான் சாப்பிடுவார்கள். ஆயாதான் பரிமாறுவாள். அப்பாவும், அம்மாவும் ஆபீஸ் விஷயங்களையே பேசிக் கொண்டிருப்பார்கள். அப்போதும் உஷா ஒரு மனுஷி என்றே உணராமல், அவர்களுக்குள்ளேயே பேசிக் கொண்டிருக்கும் பொழுது, உஷாவுக்கு அழுகையாய் வரும்.

உணவு முடிந்த பின்னரும் அம்மா, அப்பாவின் பேச்சு தொடரும். அவளிடம் யாரும் பேச மாட்டார்கள். அவளுக்கும் ஏதாவது பேச வேண்டியிருக்கும் என்று

பத்மா மாத்ரே

யாருக்குமே தோன்றுவதில்லை.

அம்மாவைப் பார்க்கும் பொழுதெல்லாம் அவள் தன்னோடு ஒட்டாமல் தூரமாய் விலகி ஓடுவது போலிருக்கும் உஷாவுக்கு. அவள் தன்னோடு கொஞ்ச வேண்டும்; தட்டித் தடவிக் கொடுக்க வேண்டும் என்று தோன்றும். ஆனால் தன் ஆசைகளை எப்படி சொல்வது, எப்படி பெறுவது என்பது தெரியாமல் குழம்பி நிற்பாள்.

உஷாவின் பிறந்த நாளுக்கு இன்னும் இரண்டே நாட்கள்தான் இருந்தன. அந்த ஒரு நாள்தான் வீட்டில் கலகலப்பும், குதூகலமும் நிரம்பியிருக்கும். உறவினர்கள், நண்பர்கள், சினேகிதிகள் என்று வீடு திருவிழாக் கோலம் பூண்டிருக்கும். அம்மா அவளை அணைத்தபடி கேக் வெட்டுவாள். ஒரு துண்டை எடுத்து வாயில் ஊட்டி விடுவாள். கன்னத்தில் முத்தமிடுவாள். வருடம் முழுவதும் அவள் ஏங்கி ஏங்கித் தவிக்கும் அரவணைப்பும், முத்தமும் அவளுக்கு அன்றுதான் கிடைக்கும்.

ஆனால், இந்தத் தடவை வரப்போகும் பிறந்த நாள் பற்றிய நினைவுகள் அவளுக்கு எவ்வித உற்சாகத்தையும் தரவில்லை. ஒரு நாள் சந்தோஷம்... பிறகு வழக்கமான தனிமை, வெறுமைதானே... என்ற கவலை!

அன்று அம்மா சீக்கிரம் வீட்டிற்குத் திரும்பியிருந்தாள். வீட்டின் முன்னறையில் ஜன்னலருகே அமர்ந்து தோட்டத்து வண்ணத்துப் பூச்சிகளைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்த உஷாவைப் பார்த்து ஒரு புன்சிரிப்புடன், "ஹலோ!" என்றாள். பிறகு உள்ளே போய் விட்டாள்.

சிறிது நேரத்திற்குப் பின்னர் அம்மாவும் அப்பாவுமாக இருவரும் வெளியே வந்தனர். தன்னந்தனியே, யாருமற்ற அனாதைச் சிறுமி போல் அமர்ந்திருந்த உஷாவுக்கு அருகில் வந்தனர்.

"உஷா," என்றாள் அம்மா. "ரெண்டு நாள்ல உன் பிறந்த நாள் வருது. உனக்கு என்ன வேணும், சொல்லு. உங்கிட்டே ஏராளமான உடைகள், விளையாட்டுச் சாமான்கள், புத்தகங்கள் எல்லாமே இருக்கு. ஏதாவது புதுமையா, உண்மையிலேயே உனக்குத் தேவையானதாய், இதுவரை உங்கிட்டே இல்லாததாய் ஏதாவது தர விரும்பறோம். ஆனா, எதைத் தருவதுன்னுதான் எங்களுக்குப் புரியலே. உனக்கு எது விருப்பம்? என்ன வேணும்னு சொல்லு, உஷா!"

உஷா திரும்பி அம்மாவையே பார்த்தாள். அவள் சொல்வது நிஜம்தான். அவளிடம் எல்லாமே இருக்கின்றன. எல்லாமே என்றால் எல்லாமேதான். ஆனால்.... ஆனால்.... அம்மாவின் அரவணைப்பு, அருகாமை, கொஞ்சல்....?

'அம்மா, என்னை அணைச்சுக் கொஞ்சேன்.... எனக்குச் சாதம் ஊட்டிவிடேன்... தலைவாரிப் பின்னி விடேன்... அம்மா எனக்கு நீதான் வேண்டும்; நீதான் வேண்டும்...' என்று சப்தமாகச் சொல்ல வேண்டும் போல் இருந்தது. ஆனால் உஷா, தன் உணர்ச்சிகளுக்குச் சொல் வடிவம் கொடுக்கத் தெரியாமல் அப்படியே நின்றாள்!



* புராதனத் தலைநகர் ஷாங்காயில் கோபால்சாமி...



* உலக அதிசயங்களில் ஒன்றான நீண்ட மதில் சுவர்...

அண்மையில் சீனாவுக்குச் சென்று வந்த தி. மு. க. எம். பி. யான வை. கோபால்சாமி கூறுகிறார்......

# சீனாவில் ஒரு குழந்தைக்கு மேல் பெற்றால்...

● சீனாவில் நான் பார்க்க விரும்பிய இடம் மா-சே-துங் நினைவாலயம், பீகிங்கிலுள்ள பாராளுமன்றம், புரட்சி மியூஸியம். (இங்குள்ள ஜீவன் மிகுந்த ஓவியங்களைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம்!) சீன வரலாற்று மியூஸியம் ஆகியவற்றின் நடுவே அமைந்துள்ள மா-சே-துங் நினைவாலயத்துக்குத் தினமும் சராசரி முப்பதாயிரம் பேர் வருகிறார்கள். இவர்களில் இருபது சதவீதம் பேர் வெளிநாட்டினர்! ரஷ்யாவில் லெனின் உடலைப் பதப்படுத்தி வைத்திருப்பது போல், இங்கே மா-சே-துங் உடலையும் பதப்படுத்தி வைத்திருக்கிறார்கள். இன்றைய இளைய தலைமுறையினரிடம் மா-சே-துங் பற்றிக் கேட்டால், இரண்டு விதமான கருத்துக்கள் வெளிவருகின்றன. மக்கள் மனத்தில் மா-சே-துங்கிற்குத் தனியிடம் இருந்தாலும் கலாசாரப் புரட்சிக்குப் பிறகு, அவர் மீது மக்களுக்குக் குறிப்பாக இளையதலைமுறையினருக்கு, வெறுப்பு ஏற்பட்டதாகச் சொல்கிறார்கள்!

● சீன நாணயத்தின் பெயர் யுவான். ஒரு யுவான் என்பது நம் நாட்டு நான்கு ரூபாய்க்குச் சமம். அங்கு ஊழியர்களுடைய சம்பளம் இருபது யுவானிலிருந்து இருநூறு யுவானுக்குள் அடங்கி விடுகிறது.

● எங்கு பார்த்தாலும் சைக்கிள், சைக்கிள் தான். மக்கள் தினமும் சைக்கிள் விடுவதால் நல்ல ஆரோக்கியமாக இருக்கிறார்கள். நிறைய தேநீர் அருந்துகிறார்கள். பருத்த தோற்றமுடையவர்களை அங்கு பார்க்க முடியவில்லை.

● சீனாவில் இப்போது இரண்டு விஷயங்கள் மும்முரமாக நடக்கின்றன. ஒன்று, ஏராளமான வீடுகளைக் கட்டுதல்; மற்றொன்று, மரங்கள் நடுதல். இவையிரண்டும் நிஜமாகவே செய்யப்பட்டு வருகின்றன.

● சின்னச் சின்ன நீர்ப்பாசனத் திட்டங்கள் அதிக அளவில் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. நூறு கோடிக்கும் சற்று அதிகமான மக்கள் தொகை கொண்ட சீனாவின் உணவு உற்பத்தி நான்கு கோடி டன். உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்று விட்ட சீனா தற்போது உணவுப் பொருள்களை ஏற்றுமதியும் செய்கிறது. விவசாயிகள், பொருள்களை உற்பத்தி செய்து, சந்தையில் விற்று லாபத்தை எடுத்துக் கொள்கிறார்கள். நிலம் மட்டும் அரசுக்குச் சொந்தம்.

● கு. க. திட்டம் மிகக் கடுமையான முறையில் அங்கு அமல்படுத்தப்படுகிறது. ஒரு குழந்தைக்கு மேல் பெற்றால் அங்கு தொல்லைகள்தான். இரண்டாவது குழந்தைக்குப் பள்ளிக்கூடத்தில் இடம், வேலை வாய்ப்பு, மருத்துவ வசதி என்று எதுவும் கிடையாது. இந்நிலையிலும் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால், சிறுபான்மையினராக வாழும் இஸ்லாமிய மக்க

ளுக்குக் கு. க. திட்டத்திலிருந்து விதி விலக்கு அளிக்கப்பட்டுள்ளதுதான்!

• உலகின் பல பாராளுமன்றக் கட்டடங்களை நான் பார்த்திருக்கிறேன். ஆனால், இந்தியாவுக்கு அடுத்தபடியாகச் சீனாவின் பாராளுமன்றக் கட்டடமும் உலக அதிசயங்களில் ஒன்றான எட்டாயிரம் கி. மீ. நீளமுள்ள நெடுஞ்சுவரும் என்னை வெகுவாகக் கவர்ந்தன.

• பொருளாதாரக் குற்றம் புரிபவர்கள், லஞ்சம் கொடுப்பவர்கள் — வாங்குபவர்கள், விலையை ஏற்றி விற்பவர்கள், பதுக்கலில் ஈடுபடுவோர் ஆகியோர் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படுகிறது. பொருளாதாரக் குற்றம் புரிந்தவர்கள் மீது, குற்றம் நிரூபிக்கப்பட்டால் மரண தண்டனை விதிக்கப்படுகிறது.

• சீனாவின் புராதனத் தலைநகரம் ஷாங்காய், பீகிங்கிலிருந்து இரண்டு மணி நேர விமானப் பயணத்தில் இருக்கிறது. ஒரு கோடிக்கும் அதிகமான மக்கள் தொகை கொண்ட ஷாங்காய் நகரத்தில் மக்கள் ஆடம்பரமான உடைகளோடு வளமாகக் காட்சியளிக்கிறார்கள். ஆயிரம் பேர், இரண்டாயிரம் பேர் ஷாப்பிங் செய்யக் கூடிய அளவுக்குக் கடைகளெல்லாம் பிரும்மாண்டமாக இருக்கின்றன.

• டி. வி. யில் தினமும் ஒரு மணி நேரம் ஆங்கிலம் சொல்லித் தருகிறார்கள்.

• மக்களிடையே பேசிப் பார்த்ததில் இந்தியாவைப் பற்றிக் கசப்புணர்ச்சி ஏதும் அவர்களிடம் இல்லை.

• ஒரு கட்சி (கம்யூனிஸ்ட்) ஆட்சி முறை உள்ள சீனாவில் தற்போது ஆட்சியை வழி நடத்திச் செல்லும் கம்யூனிஸ்ட் தலைவர் 83 வயதான டெங் — ஷியோ — பிங் என்பவர்.

• பீகிங்கில் போக்குவரத்துப் போலீஸாரையே பார்க்க முடியவில்லை. சில பகுதிகள் இன்னும் சேரிகள் போல் இருக்கின்றன. தெருவில் பார வண்டிகள் இழுப்போரையும் பார்த்தேன். கார்கள், பெரும்பாலும் வெளிநாட்டுத் தூதுவர் காரியாலயத்தைச் சேர்ந்தவைகளாகத்தான் இருக்கின்றன.

• மக்களுக்கு உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றுக்கு இங்கே உத்தரவாதம் இருக்கிறது. எல்லோரும் ஒரே மாதிரியான உடை அணிந்திருப்பார்கள் என்று சிலர் சொல்வதெல்லாம் கலாசாரப் புரட்சிக் காலத்தில் நடந்திருக்கலாம். ஆனால், இப்போது அப்படி இல்லை. ஏழ்மை தோற்றம் கொண்ட பலரை பீகிங்கில் நான் பார்த்தாலும் பிச்சைக்காரர்கள் எவரையும் பார்க்கவில்லை.

தொகுப்பு: ப்ரியன்

## அடுத்த இதழ்...



**கலைவிழாச் சிறப்பிதழ்!**

• பழம்பெருமை பேசினால் போதாது!
— நாடகக் காவலர் மனோகர் வருத்தம்

• மேடை ஏறாத கலைஞர் •

• 'அகாடெமி'காரர்கள் யோசிக்க வேண்டாமோ?

• இளைஞர்களால், இளைஞர்களுக்காக...

• சண்டைகள் ஓயுமா? சங்கங்கள் இணையுமா?

உங்கள் வங்கிக் கணக்குகளில் நீங்கள் நினைவில் கொள்ள வேண்டிய

# ஐந்து விதிமுறைகள்

**1**

உங்கள் பாஸ் புக்கை அவ்வப்போது வங்கியில் கொடுத்து கணக்குகளைப் பதிவு செய்து கொள்ளுங்கள். இதனால் நீங்கள் உங்களது பணவரவு செலவுகளைக் கண் காணித்துக் கொள்ளு வதோடு, கட்டுப் பாட்டுக்குள்ளும் வைத்துக் கொள்ள முடியும்.

**2**

உங்கள் கரெண்ட் அக்கவுண்ட் ஸ்டேட் மெண்ட் குறிப்பிட்ட காலத்தில் தவறாமல் கிடைக்கிறதா என்று கவனித்துக் கொள்ளுங்கள். அவ்வாறு கிடைக்க வில்லையென்றால் உங்கள் வங்கியை அணுகி விசாரியுங்கள்.

**3**

உங்கள் செக் புத்த கத்தையும், பாஸ் புக்கையும் பத்திரமாக வைத்திருங்கள். செக் புத்தகமோ அல்லது செக்குகளோ காணாமற் போனால் வங்கிக்கு உடனடியாக எழுத்து மூலமாகத் தெரிவியுங்கள்.

**4**

உங்களது பிக்சட் மற்றும் ரீ இன்வெஸ்ட்மெண்ட் டெபாசிட் கணக்குகளை அவை முதிர்ச்சியடையும் நாட்களில் புதுப்பிப் பதற்கு மறவாதீர்கள்.

**5**

வெளியூர்களுக்கு அனுப்பும் டிமாண்ட் டிராப்டுகளை கிராஸ் செய்து,பதிவுத் தபால் மூலமே அனுப்புங்கள். உரியவருக்கு அவை போய்ச் சேருகின் றனவா என்பதை உறுதி செய்து கொள்ளுங்கள்.

## பப்ளிக் செக்டர் பாங்குகள்

—எங்கிருந்தாலும் என்றும் உங்கள் வாழ்வோடு இணைந்தவை.

**28 உறுப்பினர் பாங்குகள்**

ஜாயின்ட் பப்ளிசிட்டி கமிட்டி
பப்ளிக் செக்டர் பாங்குகள்

- அலஹாபாத் பாங்க்
- ஆந்திரா பாங்க்
- பாங்க் ஆப் பரோடா
- பாங்க் ஆப் இந்தியா
- பாங்க் ஆப் மஹாராஷ்ட்ரா
- கனரா பாங்க்
- சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா
- கார்ப்பொரேஷன் பாங்க்
- தேனா பாங்க்
- இந்தியன் பாங்க்
- இந்தியன் ஓவர்சீஸ் பாங்க்
- நியூ பாங்க் ஆப் இந்தியா
- ஓரியண்டல் பாங்க் ஆப் காமர்ஸ்
- பஞ்சாப் நேஷனல் பாங்க்
- பஞ்சாப் & சிந்த் பாங்க்
- ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா
- ஸ்டேட் பாங்க் ஆப் பிகானேர் & ஜெய்ப்பூர்
- ஸ்டேட் பாங்க் ஆப் ஹைதராபாத்
- ஸ்டேட் பாங்க் ஆப் இந்தோர்
- ஸ்டேட் பாங்க் ஆப் மைசூர்
- ஸ்டேட் பாங்க் ஆப் பாட்டியாலா
- ஸ்டேட் பாங்க் ஆப் சௌராஷ்ட்ரா
- ஸ்டேட் பாங்க் ஆப் ட்ராவன்கூர்
- சிண்டிகேட் பாங்க்
- யூகோ பாங்க்
- யூனியன் பாங்க் ஆப் இந்தியா
- யுனைடெட் பாங்க் ஆப் இந்தியா
- விஜயா பாங்க்

imageads/JPC/87279/TAM

## வட்டமேஜை

# தூள் கிளப்புகிறார் தளபதி திடமதி

* 'நீலகிரிக்கும் அபாயம்' என்ற அட்டைப்படக் கட்டுரையின் மூலம், காடுகளை அழிப்பதனால் ஏற்படும் நிலைமைகளை, புள்ளி விவரங்களுடன் அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் விளக்கிய 'கல்கி'க்கு எங்களின் மனமார்ந்த பாராட்டுக்கள்!

மயிலாடு துறை — 2. வி. கந்தன்.

* வெயிலின் அருமை நிழலில் தெரியும் என்பது போல வறட்சியின் பிடியில் சிக்கியிருக்கும் தமிழகத்தில் இப்படி ஓர் அருமையான இயற்கைக் காட்சியைக் காண்பது குளுமைதான்... ஆனால் சாக்கடைக்குளம் என்ற போதுதான் முகம் சுளிக்க நேரிடுகிறது. இருப்பினும் அட்டைப்படத்தில் அவையெல்லாம் ஒன்றும் தெரியாமல் பசுமை மணம் வீசுகிறது...!

மேலப்பட்டி. எல். தமிழரசி.




* தேவையில்லாத விஷயங்களில் ஈடுபட்டு விஞ்ஞம் கல்லூரி மாணவ, மாணவிகளுக்கிடையில் ஊட்டி அரசுக் கல்லூரி மாணவ மாணவியரின் UNI-Y பாராட்டுக்குரியது. அரசுதான் அவர்களைச் சரியான படி பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

மயிலாடுதுறை — 2. எஸ். பி. அன்புச்செல்வன்.

* மகேந்திரனின் பதில்கள் மிகவும் சூடாக இருந்தன. கடந்த ஒன்றரை வருடமாகத் தமிழ்த் திரை உலகம் மறந்த ஒருவரை வாசகர்களின் கண்களில் படும் வண்ணம் எடுத்துக் காட்டிய கல்கிக்கு நன்றி.

காரைக்குடி. ஆர். கருப்பையா.

* வெற்றிக்குத் தம்மை மட்டும் காரணம் காட்டி, தோல்விகளுக்குப் பிறரைக் காரணம் காட்டியது மகேந்திரனுக்கு அழகில்லை!

மதுரை — 20. மதுரை ஜோ.

* மகேந்திரன் பேட்டி வித்தியாசமாக இருந்தது. முதல் கேள்விக்கான அவரது பதில், சினிமாவுக்குச் சரியான விளக்கம். அறிவுபூர்வமாகச் சிந்திக்கும் கலைப் பிரக்ஞை உடைய டைரக்டராகவும் அவரை இனம் காட்டியது. பாராட்டுக்கள்.

ஸ்ரீரங்கம். வி. சௌரிராஜன்.

* திருமணமாகாத பெண்கள் ஜன்னல் அருகே அமர்வது முழுக்க, முழுக்க ஆண் வேட்டைக்காக மட்டுமே என்ற நம் பத்தாம்பசலித்தனமான எண்ணங்களைத் தகர்த்து எறிந்தது 'ஜன்னல் பறவை' சிறுகதை! பாராட்டுக்கள்!

திருத்துறைப்பூண்டி — 16. ஜெ. பிஸ்மி.

* ஏழைகள் என்ற வார்த்தைக்கு உண்மையான கருத்தை உயர்ந்த நடையில் பிரதிபலித்த — 'ஏழைகள்' சிறுகதை எங்கள் மனத்துக்கு ஒரு நிறைவை அளித்தது.

ஈரோடு — 6, பள்ளிபாளையம் கே. இரஞ்சனிப்ரியன்.

* 'சிதைந்த ஸ்வரங்கள்' சிறுகதை படித்தேன். இசைவாணியின் வார்த்தைகள் கணேசனை மட்டும் விஷ அம்புகளாய்த் தாக்கவில்லை; எங்களையும்தான்!

குடியாத்தம் — 2. கோ. நாகேஸ்வரன்.

* தளபதி திடமதி அவர்களே, தாங்கள் கல்கியில் தூள் கிளப்ப ஆரம்பித்து விட்டீர்கள். தங்களது அரிய கருத்துக்களைக் கேட்க வாரா வாரம் உங்கள் வருகையை ஆவலுடன் எதிர்பார்க்கிறோம்!

இராமேஸ்வரம். அ. அருள்.

* இந்த வாரத் தலையங்கத்தில் நமது மத்திய அரசின் பத்திரிகை சுதந்திரத்திற்கு எதிரான நடவடிக்கைகளை மிகவும் தெளிவாக விளக்கியுள்ளீர்கள். அதற்கு ஈடாக அமைந்தது கார்ட்டூன்.

சென்னை — 50. சி. டி. அரசு.

* இந்தியன் எக்ஸ்பிரஸ் மீதான மத்திய அரசின் அநியாயச் செயல்பாடுகள் குறித்த தங்கள் தலையங்கம் படுசுத்தம். மக்கள் வோட்டுப் போடும் இயந்திரங்கள்தான். அவர்களது குரலாக ஒலிப்பது பத்திரிகை. அதன் குரல்வளையை நெரித்துவிட்டு எந்தச் செப்பிடு வித்தை செய்தாலும் இக்கொலை பாதகச் செயல்கள் நிச்சயம் மக்களை உஷ்ணமாக்கும். அதன் அருகில் நிற்பவர்கள் யாராக இருந்தாலும் பஸ்மம்தான்!

குடியாத்தம் — 2. கே. வேங்கடசுப்ரமணியன்.

* நீலகிரி மாவட்டம் பற்றி அதன் கலெக்டர் அளித்த பேட்டி மிகவும் நன்றாக இருந்தது. நடைமுறையிலும் நன்றாக அமைய வேண்டும் என்பதுதான் நமது ஆசை.

சென்னை — 19. ஆர். வி. சுப்பிரமணியன்.

* ஊனத்தைத் தோற்கடித்தவர்களின் விளையாட்டும், புகைப்படமும், கட்டுரையும் தன்னம்பிக்கை குறைந்தவர்களுக்கு அருமையான பாடமாய் அமைந்திருக்கும் என்பது திண்ணம்.

கோவை. உ. மார்த்தி.

மங்கலம் அத்தைக்கு இது இரண்டாவது 'ஹார்ட் அட்டாக்!'

''வேண்டப்பட்டவர்களுக்குத் தந்தி கொடுத்து விடுங்கள்!'' என டாக்டர் கூறியதன் பேரில், கிட்டத்து உறவான இரண்டு மருமகன்களுக்கும் தந்தி கொடுத்து விட்டார்கள்.

அடுத்த நாள் காலையே இரண்டு பேரும் வந்து விட்டார்கள். முதலில் வந்தவன் முகுந்தன். மங்களத்தின் தம்பி நாணுவின் மகன். பி. ஈ. படித்துவிட்டுச் சென்னையில் கட்டடக் காண்ட்ராக்ட் எடுத்து சிமெண்டிலும் இரும்பிலும் ஏகமாகச் சம்பாதித்துக் கொண்டிருக்கிறான்.

இரண்டாமவன் கோபி, மங்களத்தின் கணவர் சுந்தரத்தின் தங்கை பிள்ளை. தூத்துக்குடியில் பள்ளிக்கூட ஆசிரியராக இருக்கிறான். அவன் மாணவர்களுக்குப் போடும் கணக்குகளில்தான் ஆயிரங்கள் தாராளமாகப் புழங்கின. வீட்டில் மாதத்தின் கடைசி சில நாட்கள் வெகு சிரமத்துடன் தான் கழிந்தன.

முகுந்தன் தன் மனைவி ராதாவுடன் வந்திறங்கிய போது, கோபி தான் மட்டும் தனியாகத் தோளில் ஆடிய ஒரே பையுடன் வந்து சேர்ந்தான்.

ஒருவனுக்கு ஒருவன் கொஞ்சமும் மாற்றுக் குறையாமல் 'மாமி' என்றும் 'அத்தை' என்றும் மாறி மாறி அழைத்துத் தாங்கள் வந்திருப்பதைக் கவனப்படுத்தினார்கள். இரண்டு பேரும் படுக்கையின் பக்கத்தை விட்டு நகராமல் இரவு பகலாகக் காவல்

# கழுகுகள்



இருந்தார்கள்.

முகுந்தனின் மனைவி ராதா, காரியஸ்த ரிடம் அத்தையின் சொத்து எவ்வளவு தேறும் என நாசூக்காக விசாரித்துத் தெரிந்து கொண்டாள். அந்த வீடு, கொஞ்சம் நிலம் தவிர, ரொக்கமாகவும் நிறைய இருந்தது. வங்கிகள் மூலமாகவும், தனி நபர்களிடமிருந்தும் வட்டியே மாதா மாதம் ஐயாயிரத்திற்குக் குறையாமல் வருவ தாகச் சொன்னார்.

அத்தையின் வாரிசு யார்...?

முகுந்தனா? கோபியா?

அட! ஆளுக்குப் பாதி என்று கிழவி எழுதி வைத்து மண்டையைப் போட்டால் சரி... எவனாவது ஒருவனை முழுவதும் ஒதுக்கி விட்டால் என்ன செய்ய?

மங்களத்திற்கும் தான் அதிக நாட்கள் இருப்போம் என்ற நம்பிக்கை போய் விட் டது. வீடோ, நிலமோ தனித்தனியாகத் துண்டாடப்படுவதை அவள் விரும்ப வில்லை. யாராவது ஒருவனுக்கு எனத் தீர் மானித்தாள் அவள். யாருக்கு...? வசதிக் குறைவானவன் கோபி. கல்யாணத்திற்கு இரண்டு பெண்கள் இருக்கிறார்கள். இந்தச் சொத்து அவனுக்கு உதவும்... ஆனால் கோபி யைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் அவன் தாய் பார்வதத்தின் முகம்... தான் புக்ககம் வந்த புதிதில் தன்னை அரக்கியாக ஆட்டி வைத்த நாத்தியின் நினைவு — கோபி யின் பக்கம் சாய விடவில்லை.

முகுந்தன் வசதியுள்ளவன்... வீட்டையும் நிலத்தையும் விற்க வேண்டிய அவசியம் இல்லை... அப்பா போன பிறகு, தன்னை வருத்திக் கொண்டு உடன் பிறந்தவள் கண் கலங்காமல் இருக்க எத்தனை பாடுபட்டிருக் கிறான் நாணு! அவன் செய்ததற்கு எல்லாம் பிரதியாக இப்போது முகுந்தனுக்குச் செய்ய லாமே...

இரண்டு முறை நெஞ்சில் வலி வந்து எச்சரித்துவிட்டுப் போய் விட்டது. அடுத்த முறை எச்சரிக்கையுடன் நிற்காது எனத் தெரியும்.

இப்போது டாக்டர் அவளை வீட்டிற்குள் மெதுவாக நடக்கலாம் எனக் கூறிவிட்டார். முகுந்தனும் கோபியும் ஊருக்குத் திரும்ப யத்தனித்தனர்.

**ம**தியம் இரண்டு மணி இருக்கும். மங்க ளத்திற்கு விழிப்பு வந்தது. கொஞ்சம் மெது வாக எழுந்து நடக்கலாம் என்ற எண்ணத் தில் கட்டிலில் மெதுவாக எழுந்து உட்கார்ந் தாள். வீட்டு முன் அறையில் முகுந்தனும் அவன் மனைவியும் பேசிக் கொண்டிருந்தது தெளிவாகக் காதுகளில் விழுந்தது. மாமி அயர்ந்து தூங்குகிறாள் என்ற நினைவில் அவர்கள் தங்கள் குரலை மட்டுப்படுத்த வில்லை.

''அத்தையிடம் கேட்டீர்களா?'' — இது ராதை.

''எதை?'' — எனக் கேட்டான் முகுந்தன் அப்பாவி போல.

''படித்துப் படித்துச் சொல்லியும் புரிய வில்லையா? இதுவரை டாக்டருக்கு — மருந் துக்கு — அப்படி இப்படி என்று மூவாயிரம் ரூபாய்க்கு மேல் கைக்காசை வீசி இறைத் திருக்கிறீர்கள்... நமக்கு என்ன கொட்டியா கிடக்கிறது?''

''ராதை! நீ புரியாமல்...''

''என்ன புரியாமல்...? அங்கே பாருங் கள், அந்த கோபியை! 'மாமி, மாமி' — என வாயெல்லாம் பல்லாகக் குழைவதுடன் சரி. ஒரு டஜன் ஆரஞ்சுப்பழம் வாங்கினால் கூடத் தம்கையிலிருந்து தருவதில்லை... பன்னி ரண்டு ரூபாய் என்று சொல்லிக் காரியஸ்த ரிடம் கேட்டு வாங்கிக் கொடுக்கிறார். கேவலம் வெண்டைக்காய்... கிலோ மூன்று ரூபாய்... பணத்தைக் காரியஸ்தரிடமிருந்து வாங்கிக் கொடுத்தாரே தவிர தம்கைப்பையைத்திறக்க வில்லை...''

''அது சரி. நான் யாருக்குச் செய் கிறேன்...? சொந்த அத்தைக்குத்தானே?''

இதைக் கேட்ட மங்களத்தின் மனம் பெரி தாகத் திருப்திப்பட்டுக் கொண்டது. இப்படி ஒரு பிள்ளை. தன் பணம் என்று நினைக் காமல் — அந்தக் கோபியைப் போலப் பைசா கணக்குப் பார்க்காமல் — செலவழிக் கிறானே...? நல்ல குணத்திற்குத் தன் அப்பா வைக் கொண்டு இருக்கிறான். இவனை விட அவளுக்கு வேண்டியவர் யார் இருக்க முடி



ஸரோஜி

மனிதன் ஒவ்வொரு நாளும் தன் தலை முடியைச் சீவிச் சரிப்படுத்திக் கொள்கிறான். ஏன் அவன் தன் உள்ளத்தைச் சரிப்படுத்திக் கொள்ளக் கூடாது?

— சீனப் பழமொழி.
— ஏ. கே. நாசர்.

யும்? சொத்து அத்தனையையும் அவன் பேரில் எழுதி வைக்க முடிவு செய்த மறு கணம்...

ராதையின் குரல் தொடர்ந்தது.

''உங்கள் அத்தைதான்... யார் இல்லை என்றீர்கள்? பார்த்துக் கொண்டேயிருங்கள்... எல்லாவற்றையும் செலவழித்து விட்டு, ஏமாளியாகி 'பே' என்று விழிக்கப் போகிறீர்கள். மாமியைக் குழைய அடித்து அந்தக் கோபி எல்லாவற்றையும் அடித்துக் கொண்டு போகிறானா இல்லையா, பாருங்களேன்...!''

''அடி பயித்தியம்...! என்னை நீ என்ன அத்தனை முட்டாள்தனமாகவா எடை போட்டாய்? நான் இன்ஜினியர் தெரியுமா? என் கணக்குப் பிசகாது. சின்ன மீனைப் போட்டுப் பெரிய மீனைத் தட்டிப் போவது போலத்தான்... இந்த மூவாயிரம் இன்றைக்குப் போடும் முதல். இது நாளைக்கு லட்சக் கணக்காய் அள்ளிக் கொடுக்கும். நாம லாட்டரிச் சீட்டு வாங்குகிறோம்... அதில் பரிசு விழுந்தாலும் விழும். இல்லாவிட்டாலும் இல்லை. சொத்து எனக்குத்தான்... நாம் புறப்பட்டு வந்த மறுநாள் வக்கீலைத் தருவிக்கும்படி கிழவி காரியஸ்தரிடம் சொன்னது எனக்குத் தெரியும். அடுத்த வாரம் உயிலின் காப்பி என் கையில்... படித்துப் பார்த்த பிறகுதான் என் சாமர்த்தியம் உனக்குப் புரியும்...!'' எனச் சிரித்தான் முகுந்தன்.

மங்களத்திற்குச் 'சீ' என்று ஆகிவிட்டது! இவ்வளவுதானா இவன்? ஒருவன் பைசா செலவழிக்கக் கணக்குப் பார்க்கிறான்... இன்னொருவன் ஒவ்வொரு பைசாவிற்கும் எத்தனை மடங்கு திருப்பிக் கிடைக்கும் எனக் கொட்டாவி விடுகிறான்.

எதையும் வெளிக்காட்டாமல் முகுந்தனையும் ராதையையும் வழியனுப்பி வைத்தாள் மங்களம்.

''முகுந்தா... நீ எனக்காக எது செலவழித்திருந்தாலும் காரியஸ்தரிடம் ஞாபகமாகக் கேட்டு வாங்கிக் கொள்!'' என்றாள் மங்களம்.

''ஏதோ கொஞ்சம்... பெரிதாக ஏதும் இல்லை... ஒரே அத்தை நீங்கள்... செய்தால் என்ன குறைந்தா போய் விடுவேன்?'' — என உருகினான் முகுந்தன்.

''அப்படி இல்லை... தாயும் பிள்ளையும் ஆனாலும் வாயும் வயிறும் வேறே!'' என மங்களம் கட்டாயப்படுத்தினாள்.

ஆயிரம் பிகு செய்து கொண்ட பின்னர் — காரியஸ்தரிடம் கொஞ்சம் ''தாராளமாக'' வே கணக்குச் சொல்லிப் பணம் பெற்றுக் கொண்டான் முகுந்தன். ராதைக்குப் பரம திருப்தி.

மறுநாள் காலை கோபி நமஸ்காரம் செய்து விட்டுப் புறப்பட்டான்.

'உம்... எல்லாம் வெளி வேஷம்... தனக்காக ஒரு பைசா கூடச் செலவழிக்காத பிள்ளை... கேவலம் வெண்டைக்காய்க்காகக் கூடக் காசு வாங்கினானே!'

அசிரத்தையாக அவனுக்கு விடை கொடுத்து அனுப்பினாள் மங்களம்.

அடுத்த நாள் வக்கீல் வந்தார்.

தன்னுடைய இறுதிச் சடங்குகளுக்காக ரூபாய் பத்தாயிரம்... உழைத்த காரியஸ்தருக்கும் மற்ற வேலைக்காரர்களுக்கும் தாராளமாகப் பணம்... பாக்கி சொத்து அத்தனையும் தர்ம காரியங்களுக்கும் கோவில்களுக்கும் எழுதி வைத்தாள் மங்களம். முகுந்தனுக்கோ, கோபிக்கோ ஒரு பைசாக் கூட இல்லை.

மறுநாள் காலை மங்களம் காரியஸ்தரைத் தேடினாள். அவர் பாங்க் வேலையாகப் போயிருப்பதாகத் தகவல் வந்தது.

காரியஸ்தரிடம் மங்களம் விசாரித்த போது, ''கோபி ஸார் அவசரமாகப் புறப்பட்டுப் போய்விட்டார். அவருக்குக் கொஞ்சம் பணம் தர வேண்டியிருந்தது. அனுப்பி விட்டு வந்தேன்.''

''எதற்கு? பழம், கறிகாய் வாங்கிய செலவா?''

''என்ன சொல்கிறீர்கள்?''

''அந்தக் கஞ்சன் பைசா விடாமல் கேட்டிருப்பானே?''

''இல்லை அம்மா... நம் தந்தி போன போது அவரிடம் பணம் இல்லை... எது எப்படி இருக்குமோ எனப் பெண்டாட்டியின் கைவளையல்களை அடகு வைத்து மூவாயிரம் ரூபாய் பணம் வாங்கி வந்தார். அதை அப்படியே என்னிடம் கொடுத்து வைத்திருந்தார்...''

''உங்களிடமா?''

''ஆமாம், அம்மா... அடிக்கடி சொல்வார். 'மாமாவும் மாமியும் எனக்கு எத்தனை செய்திருக்கிறார்கள்? என் தோலைச் செருப்பாகத் தைத்துப் போட்டால் கூட ஈடாகாது. நான் ரொம்பச் செலவாளி. அவசரத்திற்கு என்னால் புரட்ட முடியாது!' என்று சொல்லி என்னிடம் கொடுத்திருந்தார். போகும் போது மறந்து போய்...''

மங்களம் புரிந்து கொண்டாள். ஒரு நல்ல பிள்ளையை — யாரோ பேசியதைக் கேட்டுத் தப்பாகப் புரிந்து கொண்டு எல்லாவற்றையும் எவர் எவருக்கோ தூக்கித் தருவது என்ன நியாயம்?

மறுநாள் மறுபடியும் வக்கீலை வரச் சொல்லிக் காரியஸ்தரிடம் செய்தி அனுப்பினாள். உயிலைக் கோபியின் பெயருக்கு மாற்ற வேண்டுமே!

ஆனால், அன்று இரவு மங்களத்திற்கு மூன்றாவது முறை 'அட்டாக்' வந்தது; அடங்கி விட்டாள்.

மலர் என்பார்,
மதி என்பார்,
மயில் என்பார்.
எப்படி
அழைப்பினும்
கண்ணே,
ஈடில்லே எதுவும்
உனக்கு!

யங்
ஸென்ஸேஷன்ஸ்
ஸாரிகள் மற்றும் டிரெஸ் மெட்டீரியல்ஸ்

# மஃபத்லால்

—நம்பிக்கைக்குப் பெயர் பெற்றது




ம:பத்லால் இண்டஸ்ட்ரீஸ் லிட். (நியூ ஷொர்ராக் மில்ஸ்) மற்றும் ம:பத்லால் :பைன ஸ்பின்னிங் & மேன்யு:பேக்சரிங் கம். லிமிடெட்டின் ரிஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்.

Location Courtesy: The Taj Mahal Hotel, Bombay.

MF 635 D TAM



''நம்ப டாக்டர் எதில் ஸ்பெஷலிஸ்ட்...?''

''அதிகமா ஃபீஸ் கறக் கறதுலதான்!''

— திருக்குவளை பவித்ரமரியா

''முதலமைச்சர் ரெண்டு நாளா 'மூடு அவுட்டா' இருக்கார் போலிருக்கு; திடீர்னு நாலு மந்திரிங்களை நீக்கி அறிக்கை விட்டிருக் காரு!''

''இதுல என்ன 'மூடு அவுட்' இருக்கு?''

''அந்த நாலு பேர்ல ரெண்டு பேரு மத்திய அமைச்சர்களாச்சே!''

— சேத்தூர் அன்பழகன்.





மனைவி: மாதா மாதம் உங்க சம்பளப் பணத்தைச் சூதாடித் தொலைக்கறீங்களே! குடும்பம் நடத்தப் பணம் வேணும்ங்கிற பொறுப்பு வேண்டாமா?

கணவன்: அந்தப் பொறுப்பு என்கிட்டே இருக்கிற தாலதான் உன்னை வேலைக்கு அனுப்பறேன்!

— மணியன் தர்மலிங்கம்.

''என்னங்க இது? அழைப்பித ழிலே மணமகன் பெயருக்குப் பதில், தமிழ் மாதத்தின் பெயர் கொண்ட ஐந்தெழுத்துக்காரர்'னு போட்டி ருக்கு...?''

''அதுவா...? மாப்பிள்ளை 'கிசுகிசு' எழுதுபவராச்சே!''

— ஆர். வசந்தகுமார்.





கணவன்: என்ன, போர்டு எழுதிக் கிட்டு இருக்கே?''

மனைவி: பக்கத்து வீட்டுக்காரங்க அடிக்கடி கடன் கேட்டுத் தொல்லை செய்யறாங்க... அதற் குத்தான்...!

— எஸ். சாந்தி.

**நீங்கள் கேட்டவை — தராசு**

# அரசியல் சட்டத்தின் இந்தி மொழிபெயர்ப்பு அவசியம்தானா?



* யாரு?



* யாரு?



* நாற்பது நிமிடம்



* இவர் வாழ்ந்த......



* ...நாட்டிலே இவர்!

* ஜூலை சி. துரைராஜ், சென்னை — 112.

? 'நாற்பது நாட்கள் வேண்டாம், நாற்பது நிமிடத்தில் விடுதலைப் புலிகளை அழித்து விடுவோம்' என்று மூப்பனார் பேசியிருப்பது பற்றி?

! நாற்பது நிமிடங்களில் அழித்துவிட முடியும்; ஆனால் அப்படி அமைதிப் படை செய்யாததற்குக் காரணம், யாழ்ப்பாணத் தமிழ் மக்களுக்குச் சேதம் விளைவிக்கக் கூடாது என்பது ஒன்று; மற்றது, விடுதலைப் புலிகளை விரோதிகளாக நாம் எண்ணவில்லை; அவர்கள் ஆயுதங்களைப் பறிமுதல் செய்து ஜனநாயக அமைதி வாழ்க்கைக்கு அவர்களைத் திசை திருப்புவதே நமது நோக்கம். இந்த அர்த்தத்தில்தான் மூப்பனார் பேசியிருக்கிறார். தலைவர்களின் பேச்சிலிருந்து ஓரிரு வரிகளை மட்டும் தனியே பிரித்தெடுத்துப் பார்த்தால் விபரீதமாகத்தான் தோன்றும். இப்படிச் செய்வது அவர்களுக்கு அநீதி இழைப்பதாகும்.

* என். பாலசுப்பிரமணியன், சென்னை — 101

? விலைவாசி உயர்வு என்பது உறுப்பினர்கள் மூலம் அரசுக்கு எட்டி என்ன பயன்?

! ஏன் இல்லை? உறுப்பினர்களின் சம்பளமும் அலவன்சுகளும் உயரக் கூடுமே!

* கோ. கலா, தேனி.

? உத்தரப்பிரதேசத்திலுள்ள சீதாபூரில் பக்தர் ஒருவர் நாக்கை அறுத்துக் காணிக்கையாகச் செலுத்தினாராமே? இது பக்திதானா?

! அல்ல; முட்டாள்தனம். அலகினால் நாக்கில் குத்திக் கொள்வது; முதுகில் கொக்கி போட்டுக் கொண்டு உயரே தொங்குவது முதலிய எல்லாமே மூடத்தனம்தான். இதயத்தில் அன்பு சுரப்பதும் உள்ளம் தூய்மை அடைவதுமே உண்மையான பக்தி.

* மீனா சங்கர், புளியங்குடி.

? நம் அரசியல் சட்டத்தின் இந்தி மொழி பெயர்ப்பு அவசியம்தானா?

! கண்டிப்பாக அவசியம்தான். ஆனால் அது இந்தி பேசும் மக்களுக்கு மட்டும்தானே பயன்படும். இந்நிலையில் அதை எல்லா இந்திய மொழிகளிலும் ஒரே சமயத்தில் மொழி பெயர்த்து வெளியிடும் மசோதாவை மத்திய அரசு நிறைவேற்றியிருக்குமானால் மனமுவந்து பாராட்டலாம்.

*** ஆற்காடு எழிலன், திருச்சி — 2.**

**? தெற்காசிய விளையாட்டுப் போட்டிகளில் இந்தியா தங்கப் பதக்கங்களைக் குவித்தது குறித்து?**

! கண்படப் போகிறது! கிரிக்கெட்டால் நொந்து போன உள்ளங்களைத் தொண்ணூற்றொரு தங்கப் பதக்கங்களால் ஆறுதலும் உற்சாகமும் அடையச் செய்த அத்தலை பேருக்கும் நமது வாழ்த்து!

*** வை. ஆ. மங்கையண்ணன், வைத்தீஸ்வரன் கோயில்.**

**? தெரு விளக்கில் படித்து மேதை ஆக முடியுமா?**

! கடந்த காலத்தில் அப்படி ஆனவர்களின் பட்டியல் நிறையவே இருக்கிறது. நிகழ் காலத்தில் நிறைய மேதைகள் உருவாகி விடப் போகிறார்களே என்ற பயத்தில்தான் தெரு விளக்குகள் சரியானபடி எரியாமல் அரசு கவனித்துக் கொள்கிறது போலும்!

*** மு. கண்ணன், திருச்சி — 20.**

**? விமானம் ஓட்டும் அளவுக்குப் பெண்கள் முன்னேறியிருந்தும் பேருந்தை ஏன் ஓட்டுவதில்லை?**

! வெளிநாடுகளிலெல்லாம் பேருந்து என்ன, லாரியே ஓட்டுகிறார்கள். தொழிற்சாலைகளில்கூட ஆண்களுக்கு இணையாக எல்லா வேலைகளிலும் பெண்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இங்கும் கூட கிராமப்புறங்களில் ஆண்களுக்கு இணையாகப் பெண்கள் வேலை செய்வதைப் பார்க்கலாம். ஆக, பெண்களால் ஆண்களைப் போல் எல்லா வேலைகளையும் செய்ய முடியும் என்பதில் சந்தேகமேயில்லை. படித்த பெண்கள்தான் படித்த ஆண்களைப் போலவே கௌரவம் பார்த்துச் சில வேலைகளிலிருந்து ஒதுங்குவார்கள்.

*** க. தியாகராசன், நெய்வேலி. ***

**? ஒரேயொரு வேட்டியோடு உத்தமர் காந்தியடிகள் வாழ்ந்த இந்தியாவுக்கும், காமன்வெல்த் மாநாட்டில் கலந்து கொள்வதற்காகப் பதினைந்து கோடி செலவு செய்த ராஜீவ் காந்தி வாழ்கிற இந்தியாவுக்கும் என்ன வேறுபாடு?**

! காந்திஜி வட்டமேஜை மாநாட்டுக்குச் சென்றது போல் நமது பிரதமரும் இடுப்பு வேட்டியோடு காமன்வெல்த் மாநாட்டுக்குச் சென்றிருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாது. எனினும் ராஜீவ் உபயோகித்த ஒவ்வொரு பொருளும் ஒவ்வொரு நாட்டிலிருந்து ஸ்பெஷலாக வரவழைக்கப்பட்டதென்பது கண்டிக்கப்பட வேண்டிய ஊதாரித்தனம். அதோடு இந்தியப் பொருள்கள் அனைத்தும் உபயோகிக்க லாயக்கில்லாதவை என்றாகிறது. இந்நிலையில் பொது மக்களுக்கு 'இந்தியனாயிரு இந்தியப் பொருள் வாங்கு' என்று அரசு உபதேசிப்பது வெட்கக்கேடு.

*** ஏ. கிரி, கும்பகோணம்.**

**? தமிழ்நாட்டிலுள்ள போக்குவரத்துக் கழகங்கள், மாவட்டங்கள், பல்கலைக் கழகங்கள் ஆகியவற்றுக்கெல்லாம் பல்வேறு தலைவர்களின் பெயர்களைச் சூட்டியுள்ளனர். ஆனால் தமிழகத்தில் ஓடும் ஆறுகளுக்கு அவ்வாறு பெயர் சூட்டப்படாமல் இருக்கிறதே, ஏன்?**

! எல்லாம் சென்டிமென்டலான பயம் தான். உதாரணமாக 'எம். ஜி. ஆர். ஆறு, கருணாநிதி ஆறு' என்று பெயர் வைத்தால் அது நாளடைவில் 'எம். ஜி. ஆர். யாரு? கருணாநிதி யாரு?' என்று கேட்கப்படுகிற ஒன்றாகி விடுமே! அதுதான். இல்லையென்றால் ஆறுகளை மட்டும் விட்டு வைத்திருப்பார்களா என்ன?

*** மன்னை அஞ்சி, வைத்தீஸ்வரன் கோயில்.**

**? வேலை வாய்ப்பு கிடைப்பதே அரிதாக உள்ள இந்தக் காலத்தில் அரசாங்க வேலைகளுக்கான வயது வரம்பை முப்பத்தைந்து என்று உயர்த்தினால் என்ன?**

! வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழிக்கும் வழி இதுவல்ல. எனினும் வேண்டியவர்களுக்கு ஓய்வுக் காலத்திற்குப் பிறகும் பதவி நீட்டிப்புச் செய்வதையாவது குறைந்த பட்சம் தவிர்க்கலாம்.

*** பி. எஸ். வாசன், ஈரோடு.**

**? நாகாலாந்து தேர்தல் முடிவு எதைக் காட்டுகிறது?**

! தேர்தலில் பண பலத்தின் முக்கியத்துவம் நீடிக்கிறது என்பது ஒன்று. அஸ்லாம் — நாகாலாந்து இடையே உள்ள பிரச்னைகள் காரணமாக மத்தியில் ஆட்சியிலுள்ள கட்சியே நாகாலாந்திலும் ஆட்சியில் இருப்பது சாதகமாயிருக்கும் என மக்கள் புத்திசாலித்தனமாகத் தீர்மானித்தது இரண்டு. மாநிலங்களில் இனி தேசியக் கட்சிகளுக்கு இடமில்லை பிராந்தியக் கட்சிகள் மட்டுமே பலம் பெறும் என்ற கருத்துப் பொய்த்துப் போனது மூன்று.

*** ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**க. தியாகராஜன்,**
**எம். 152/2, மந்தாரக்குப்பம் காலனி,**
**நெய்வேலி — 607 802.**



# “விலைவாசிகள் குறைய ரேகனைக் கேளு!”



அமெரிக்காவில் ரேகன் பங்கு மார்க்கெட் விலையையெல்லாம் குறைத்து விட்டாராமே, அங்கே போயிருந்த நம் பிரதமர் இங்கே விலைவாசியைக் குறைக்க யோசனை கேட்டுக் கொண்டு வந்திருக்கக் கூடாதா?

— ஈரோடு, சி. எஸ். என். ராஜா.

என்னை உட்டாங்கன்னு இந்த நரையே கூட்டித் தள்ளிடுவேன்; அதுக்காகத்தானே தழையத் தழைய வேஷ்டி கட்டி மேல் துண்டும் போட்டிருக்கோம்!

— சென்னை — 33, எஸ். ராம்கோபால்.





கொஞ்சம் பொறுத்துக்குங்க! நரிமணம், புவனகிரி எண்ணெய்க் கிணறுகள் வந்துட்டா, அப்புறம் கடலெண்ணெய், நல்லெண்ணெய் விலையெல்லாம் தாறுமாறுச் சரிஞ்சுடாதா!

— நெய்வேலி — 3, மாலதி சீனிவாசன்.




“அதிகம் பெருதே அவதிப்படாதே” என்கிற வாசகம் ஒவ்வோர் அரசாங்க அலுவலகத்திலும் எழுதி வைக்கப்படணும்னு யோசனை சொல்றேன்! கு. க. திட்டப் பிரசாரமும் ஆச்சு; அதிகாரிகள் அளவுக்கு மீறி லஞ்சம் வாங்காதிருக்க ஓர் எச்சரிக்கையாகவும் இருக்கும்!

— திருச்சி, சரஸ்வதி பஞ்சு.

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கெ. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 4 3154 3, 4 34 157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473389.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.

மார்வல்-இதம் தரும் தன்மை
காஞ்சிப்பட்டுப் போன்ற மென்மை.

ஸ்பன் ஸில்க் போன்ற தன்மை. காஞ்சீபுரம் பட்டுப் போன்ற மென்மை. தேங்காய் எண்ணெயின் இயற்கையான நற்குணங்கள் தரும் நுரைவளத்தின் செழுமை.






மற்ற சோப்புகளை விட
3 மடங்கு அதிகம் தேங்காய் எண்ணெ கொண்டது

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

## விநாடிகளில் நிவாரண மளிக்கும் பாம்!



## ஜண்டு பாம்
ஜலதோஷம், தலைவலி
மற்றும் நோவுகளிலிருந்து
துரித நிவாரணம்




OFFICIALLY SELECTED BY
RELIANCE CUP '87

**ZANDU BALM**




CRICKET FOR PEACE

ஜண்டு பாம் பலவகை வலிகளையும் நீக்குவதில், இதர பாம்களைவிட, அதிக சக்தி வாய்ந்த வலி நிவாரணி.

தலைவலி, ஜலதோஷம், தசைப்பிடிப்பு, மூட்டுவலி, மற்றும் சுளுக்கு ஆகியவைகளிலிருந்து நிவாரணமளிக்கிறது.

ஜண்டு பாம் ஈடு இணையற்றது; நிறமற்றது—அதனால் கறை படியுமோ என்ற பயமில்லை, பிசுபிசுப்பற்றது—அதனால் வீட்டிலோ வெளியிலோ உபயோகிக்கலாம். நறுமணமும் கொண்டது. ஜண்டு பாம் வீரியமிக்க ஃபார்முலா கொண்டதால் குறைவாக உபயோகித்தால் போதும். அதனால் சிக்கனமானது. மிருதுவான சருமத்திற்கும் உகந்தது. அதனால்தான் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு ஜண்டு பாமையே தடவ விரும்புகிறார்கள்.

*சீசாவின்மேல் இருக்கும் சிகப்பு சீலைப் பார்த்து வாங்குங்கள்.*

# ஜண்டு பாம்
# வலிகளை நீக்கும் பாம்

Z-2-87 TAM